ணைத்தவிரப்பாண்டந்தானில்லையானுமத்தோ
ற்றந்தானுங்காணல், உருவலது வேறுபொருளி
ல்லையானு- மொன்றலதுஜகமிலை யென்றுணை
ர்த்து நூலே. (௫)

பாவாபாவாதீதப்பிரம் மோகமேதாத்-பழு
தையின்றிப்பாம்புவராப்பண்பினாலும், தானே
தவனுபவத்தி லிரண்டதானுந்-தன்னறிவி லு
றைப்பிரண்டாதலாலும், மூவாதுதானவனானு
லுமாகா-முன்னமிரண்டிலவாலு மூன்றாய்நி
ல்ற, தேவாகிலசத்துசடந்துக்க நீங்காத்திறத்
தானுமிரண்டற்றதல்சிவமேயான்மா. (௬)

தலித்தசுவானுபவாதீதம்பிரம் மோகமேதா
த்-றானவனுயிருப்பதுவுஞ் சங்கற்பத்தாலும்,
அனித்தமெனவிடிற் சூன்யமாதலாலு மஅ
மறவாவிடினினைவாயபூதலாலும், இனித்தநி
ட்டைசாதனமாயிருத்தலாலு- மேதுமற்றுன்
மூடமென்றேயியம்பலாலும், தொனித்த சு
டாவமூங்கடந்ததீதந்தானேசுயம்பிரகாசமெ
ன்றேசொல்வர்தாமே. (௭)

சூத்திரம்.



உ

தசகாரிய

# மகாவாக்கியம்

## மூலமுமுரையும்

## பாயிரம்.

(அவதாரிகை)

ஜீவர்களஞ்தியஞ் ஞானவந்தகாரவிர வினித்திரை செய்துக்கொண்டு இருப்பதால்எப்போதுஞ்சம்சாரமாகிய துற் சொப்பனங்கண்டு தாபத்திரய துன்பமுற்றிருப்பதையுமவர்களுக்கற்பாயசாயுமற்பபுத்தியாயுமிருப்பதையுமாத்மவிவேக மின்றியும்அவ்விவேகமெளிதி லடையவுபாயமில்லாமலு மிருப்பதையும் பார்த்துச்சாஸ்திரமாகின்ற சூரியவுதயத்தாலவர்கள் துன்பத்தைநீங்கி முத்தியின்பமடையும்பொருட்டுப்பூர்வத்திற்சங்கராசாரியசுவாமிகள் ஆரியபாஷையிற்கூறிய மகாவாக்கியத்தை இக்காலத்திலவர்களெளிதாக வாத்மவிசாரஞ் செய்து ஆத்மஞான மடையும்படிக்குப் பேரருளாற்றிராவிடபாஷையில் விருத்தப்பாவாக மொழிபெ

யர்க்கத் தொடங்கியவிந் நூலாசிரியரிந் நூல் தேகமனமதவாதிகளின் விக்கினமின்றி யினிதினி றைவேறவு மிந் நூல்படிப்பவர் கேட்பவர்க்கு த்தேகவிக்கினமின்றியே காக்கிர சித்தமுண்டாகியாத்மதியானத்தா லானந்த முண்டாகவு மிந் நூற்பாரம்பரையாய் விளங்கவுமிதனந் தரங்கமானசத்தியக்கியான வனந்தானந்த வஸ்துவை நித்தியமாயும்நிட்களமாயும் நிராவரணமாயும்நிர்விட்சேபமாயுமிருக்கின்ற சொரூபமாயும்சர்வாதாரமாயும்சர்வவியாபகமாயும், சர்வகாரணமாயும்சர்வாத்மகமாயுமிருக்கின்றகடவுளைஉபாசிக்கின்றார்.

(கவி)

உலகமுதற் பொருளையும்பர்க் குணர்வரிதாம்பொருளை, யோதிய வேதாகமத்தி னுச்சியினுட்பொருளைப், பலகலையின் பொருண் முடிவின்முடிவான பொருளைப்பற்றறப் பற்றிய பெரியோர்பரவியவான் பொருளை, யலைதிவலை நுரைகடலினுதித்தொடுங்குமாபோ லகிலாண்ட முதித்தொடுங்குமதன் மூலப்பொருளை, யிலகிய சற்குருவாகியா ளுகும்பொருளையெங்குமாம் பரம்பொருளை யாமும்வணங்குதுமே.

(இதன் அ பதப்பொருள்)

உலகமுதற்பொருளை- சகத்தின் முதன்மையா

ண வஸ்துவை-உம்பர்க்கு - தேவர்களுக்கும்-உ
ணர்வரிதாம்பொருளை- அறிவதற்கரிதாகியவஸ்
துவை- ஓதிய-புருஷார்த்தத்தைச் சொல்லாநி
ன்றவேதாகமத்தின் - இருக்குமுதலிய நான்கு
வேதங்கள்காமிகமுதலிய விருபத்தெட்டுச்சிவா
கமங்களாகிய விவைகளினுடைய-உச்சியின்-மு
டிவில்விளங்குகின்ற,உட்பொருளை, அந்தரங்க
மானவஸ்துவை- பலகலையின்பொருள் - நானு
சாஸ்திரங்களிற்கூறப்படுமருத்தங்களின்-முடி
வின்-முடிவாயுள்ளதெய்வங்களுக்கு-முடிவான
பொருளை-மேலாகிய வஸ்துவை-பற்றற- விட
யத்திற்பொருந்துதலின்றி,பற்றிய,பொருந்து
கின்ற-பெரியோர்- மேலோர்-பரவிய - துதிக்
கின்ற-வான்பொருளை,சிரேஷ்டமானவஸ்துவை
-அலை-திரையும் -திவலை- துளியும்- நுரை,ம்பன
மும்- கடலில்-சமுத்திரத்தில்- உதித்து-தோன்
றி-ஒடுங்குமாபோல்-இருந்து அடங்குகின்ற த
ன்மைபோல-அகிலாண்டம்- சகலஅண்டங்களு
ம் உதித்து-தோன்றி-ஒடுங்கும்-இருந்து அடங்
குதற்கு - அதன்-காரணமென்னு மவைகளுக்
கும்,மூலப்பொருளை - காரணமானவஸ்துவை-
இலகிய- விளங்காநின்ற - சற்குருவாகி - ஞானு
சாரியராகின்றவஸ்துவை- யானுகும்பொருளை
-நானுகின்றவஸ்துவை-எங்குமாம்- இங்ஙனமி

ருக்கின்ற எவ்விடத்திலும் வியாபகமாகிய- பரம்பொருளை-மேலானவஸ்துவை-யாமும்-நாமும்- வணங்குதும்-மனவாக்குக்காயத்தாற்டணிகின்றேமென்றவாறு—ஏ-அசை-

பதசாரம்-

பிரளயகாலத்திற்பிரமாதிதேவதைகணசித்தும் நசியாத சத்தாமாத்திரமாயுமவர்களாலு பாசிக்கப்பட்டதாயுமவர்களஞ்சி நடக்குமாக்கினையுள்ளதாயுமிருக்கின்ற சொரூபமென்பார்-உலகமுதற்பொருளெனவும் — எழுவகைப்பிறவியிலுமறிவின்மிக்கதேவர்களாலேயுஞ் சுட்டியறிதற்கரியதற்சாட்சியாயும் விருத்தியோர்விடயத்தைச்சுட்டிஞற்றிரும்பிவிடயத்தைச் சுட்டல்போற்றன்னையறிந்தாலவ்விருத்திதிரும்பிவேறொன்றைச்சுட்டாதுதன் மயமாகும்படியானதன்மையுள்ளதாயும்வடிவமற்றும் வடிவமாயுங் காரணமற்றுங்காரணமாயும்பொருந்தலற்றும் பொருந்தியுமிருக்கின்றசொரூபமென்பார் உம்பர்க்குணர்வரிதாம்பொருளெனவும் — தருமார்த்தகாமமாகியஅபரபுருடார்த்தமூன்றைச்சொல்லுமிருக்காதிவேதத்தின்கன்ம பத்திகாண்டத்துக்குங்காமிகமாதியாகமத்துக்குமேலான மோட்சமாகியபரபுருடார்த்தத்தைச்சொல்லு ஞானகாண்டமாகியவுபநிடதத்திலும்வா

ளாகமத்திலும்விளங்கா நின்றமகாவாக்கியார்த்தசொரூபமென்பார்- ஓதியவேதாகமத்திலுச்சியிலுட்பொருளெனவும் புராணவிதிகாசசமயசாஸ்திரங் களின்றேவதைகளாகியவாச்சியார்த்தங்களுக்குலட்சியார்த்தசொரூபமென்பார்பலகலையின் பொருண்முடிவின்முடிவானபொருளெனவும்-வயதுமுதலியதாற்பெரியவராயிருப்பதின்றிச்சாக்கிரசொப்பனசுழுப்தி மூன்றற்கப்பாற்பட்டதுரியாவஸ்தையையடைந்திருத்தலான்மகான்களாயிருப்பவராற்பரதத்துவம்பரவொளிபரமாத்விதமானபரமசிவமெனத்துதிக்குஞ்சொரூபமென்பார் -பற்றறப்பற்றியபெரியோர்பரவியவான்பொருளெனவும்- சராசரப்பிரவஞ்சங்களுக்குக்காரணமென்னுந்தேகமுதலுருத்திரன்வரைக்காரணங்கட்குமாதிகாரணமான சர்வாதாரமாயுஞ்சர்வவியாபகமாயுஞ்சர்வகாரணமாயுஞ்சர்வாத்மகமாயுமிருக்கின்றசொரூபமென்பார்அலைதிவலைநுரைகடலினுதித்தொடுங்குமாபோலகிலாண்ட முதித்தொடுங்குமதன் மூலப்பொருளெனவும்-விராட்டாதியொன்பதுவாச்சியநீங்கியதத்பதலட்சியார்த்தமாகியபிரமமென்பார்இலகியசற்குருவெனவும்- தூலமாதியொன்பதுவாச்சியநீங்கியதுவம்பத லட்சியார்த்தமாகி

யகூடஸ்தசொரூபமென்பார்- யாஞகும்பொரு ளெனவும் - தத்பதலட்சியமானபிரமமுந்துவம் பதலட்சியமான கூடஸ்தருமைக்கியமாகிய அசிப தார்த்தமாய்விளங்கு மகண்ட சொரூபமென்பா ர் - எங்குமாம் பரம்பொருளெனவும் அவ்வைக் யவனுபவத்தாற்றற்போதமொழிக்கின்றோ மெ ன்பார்- யாமும்வணங்குதுமெனவுங்கூறினர்.

விசேடம்.

உலகமுதற்பொருளென்றதனால் - நித்தியமெ னவும்-உம்பர்க்குணர்வரிதாம்பொருளென்றத னால் நிஷ்களமெனவும் - பரவிய வான்பொரு ளென்றதனால் சத்தியக்கியானவனந் தானந்தவ ஸ்து நிராவரண நிர்விட்சேபமெனவும்-அகிலா ண்டமுதித்தொடுங்குமதன் மூலப் பொருளெ ன்றதனால்-சர்வாதாரசர்வவியாபக-சர்வகாரண சர்வாத்மகமெனவும்- அவதாரிகையிற்கூறப்ப ட்டதெனக்கொள்க.

கடாதிகெட்டும் - மண்ணுதிகெடாததுபோ லக்காரியமானபிரபஞ்சங்கெட்டுங்காரணமான சொரூபங்கெடாமையால் - வடிவமற்றும் வடி வமாயிருத்தலெனவும் - பழுதையிற்பாம்புத டிமாலடுதோற்றல்போல் - சொரூபத்திற் ஜீவே ஸ்வரசகப்வி வர்த்தமாகத்தோற்றுகையால்கா ரணமற்றுங் காரணமாயிருத்தல்-எ-ம்-இருப்பி

னுடைய அடியாதிவிகாரமதைப் பற்றியவக்கி னிக்கில்லாததுபோற்றேகாதியின்சுகதுக்கமுத லிய விகாரமவையிற் பொருந்திய சொரூபத் துக்கில்லாமையாற் - பொருந்தலற்றும் பொ ருந்தியிருத்தல்-எ-ம்-வயது முதலியதாவன-வ யது- செல்வஞ்- சாதி- யாச்சிரமம்- வித்தை.க ன்மம்- பத்தி - யோகம் சாதனசதுட்டயம்-சி ரவணம் - மனனம் - நிதித்தியாசனம் - சமாதி -எ-ம்- அலையாதிகடலுக் காதாரமாயில்லாது அ வைகட்குக் கடலாதாரமாயிருத்தல்போல் அகி லண்டஞ் சொருபத்துக்காதாரமா யில்லாது அவைகட்குச் சொரூபமாதாரமாயிருத்தலால்- சர்வாதாரம்-எ-ம்- அலையாதியுள்ளவிடத்துமில் லாதவிடத்துங் கடலிருக்கக்கடலுள்ள விடமெ ல்லாம் அலையாதியில்லாமைபோல அகிலாண்ட முள்ளவிடத்து மில்லாத விடத்துஞ் சொரூப மிருக்க அச்சொரூப விடமெல்லாம் அகிலாண் டமில்லாமையால் - சர்வவியாபகமெனவும் -அ லையாதிகடலிற்றோன்றியொடுங்கஅஃதவையிற் றோன்றி யொடுங்காமைபோல அகிலாண்டஞ் சொரூபத்திற் றோன்றியொடுங்க அஃதவையி ற்றோன்றி யொடுங்காமையால் சர்வகாரணம் -எ-ம்- அலையாதியிற்கடலின் குளிர்ச்சியாதில ட்சணமிருக்க அதில்அலையாதி யின்பிரட்சியா

திலட்சண மில்லாமைபோல அகிலாண்டத்திற் சொரூபத்தின் சச்சிதாநந்த லட்சண மிருக்க அதில்அவையின் அனுர்தாதி லட்சண மில்லாமையால் சர்வாத்மகம்-எ-ம்- தேகமுதலியகாரண மென்பதும்அவைகாரண மல்லவென்பது மாவன.

உலகாயுதன்-மாதாபிதாக்களாற்சிருட்டியுண்டாகின்றது கண்டதேகாட்சி யாதலால் வேறேதெய்வமில்லை ஆதலாலவர்களே செகத்காரணமென்பது, மாதாபிதாக்கள் ஆண் இச்சித்தா பெண்ணும் பெண்ணிச்சித்தா லாணு மிரண்டுமன்றியில்அலியுமுண்டாகையாலும்அவர்களுக்குப்பிராணனில்லாதபோது வொருதொழிலு நடவாதுபிராணனுண்டான போதுசகலதொழிலு நடத்தலாலுஞ் சுக்கிலசுரோணிதத்தையிவர்களொன்றுஞ் செய்யாதிருக்கவேறேயொரு ஈஸ்வரன் . கரசரணாதியவயவங்களாய்ச் செய்தலாலுமிவர்கள் பஞ்சபூதத்திற் பிறந்திறத்தலாலுங் கூடாது-

சுபாவவாதி— மஞ்சளுஞ்சுண்ணாம் புஞ்சம்பந்தப் பட்டவிடத்திற்சிவப்புண்டாதல் போற் சுக்கிலமுஞ் சுரோணிதமுஞ் சம்பந்தப் பட்டவிடத்திற் கரசரணாதியவயவ மூண்டாதல்சுபாவமாதலினாற் சகத்காரணத்துக்கு வேறேதெய்

வமில்லை யென்பது, மஞ்சளையுஞ் சுண்ணும்பையுஞ்சேர்ப்பிக்கிறதற்கு வோராள்வேண்டு வதும்போற் சுக்கிலசுரோணிதத்தைச்சம்பந்தப்படுத்துகிறதற்குவேறொருயீஸ்வரன்வேண்டுதலாற்கூடாது.

சாருவாகன்— பிராணனிருக்குங் காலத்திற்சகலதொழிலுநடந்துபிராணனீங்கியகாலத்திலொருதொழிலும் நடவாதிருத்தலாற்பிராணனைசவிஞலேயேசுக்கில சுரோணிதஞ் சேர்ந்துசிருட்டி யுண்டாகிறதுயேறேதெய்வமில்லை பிராணனேசகத்காரணமென்பது, மனதில்லாதசுழுத்தியிற்பிராணனுலேயொருதொழிலுநடவாதிருத்தலாலும்மனதானதுஅதையடைக்கிவிடுதலாலும்பிராணனானதுஇன்னபக்கத்திலோடுகிறதெ மென்கிறவறிவில்லாத செடமாதலாற்சுக்கில சுரோணிதத்தையறிந்துசேர்ப்பிக்கிற தற்குச்சித்தா யிருக்கின்றவேறேயொருயீஸ்வரன்வேண்டுமாதலாலும் அபஞ்சிகிருதபூதரசோகுண சமஷ்டியிற்பிராணனுண்டாயிறத்தலாலுங் கூடாது.

உபாசகன்- மனதிருக்கின்ற காலத்திற்சிருட்டிநடக்கிறது மனதில்லாத காலத்திற் சிருட்டிநடக்கவில்லை ஆதலால்மனதே சகத்கார

ணம்வேறேதெய்வமில்லையென்பது,புத்தியில்லாதபோதுமனஞ் சஞ்சலிக்கின்றபடியாலும் மனதைப்புத்தியானது சங்கற்பிக்கவும்சங்கற்பியாதிருக்கவும் செய்தலாலுஞ் சிருட்டிக்கிறதற்குமனசுக்குச் சுதந்தரவறி வில்லா திருத்தலாற்சுதந்தரவறிவுடைய வேறேயொருயீசுரன்வேண்டுதலாலும் மனது அபஞ்சீகிருத பூதசத்துவகுணசமஷ்டியி லுண்டாயிறத்தலாலும் கூடாது

க்ஷணிகவாதியானவன்-புத்தி யில்லாதபோதுசங்கற்பந்திரப்படாமற் சிருட்டியில்லாமற்போதலாலுமிருக்கும்போதுசங்கற் பந்திரப்பட்டுச்சிருட்டிநடக்கின்றதாலும் புத்தியேசகத்காரணம்- வேறேயொருதெய்வமில்லையென்பது, பிரியமில்லாத போது - நிச்சயித்ததொழில் நடவாமல்பிரியமிருக்கின்றபோது நிச்சயித்ததொழில் நடக்கின்றதாலுஞ் சிருட்டிக்கிறதற்குப்புத்திக்குச்சுதந்தரவறிவில்லாதிருத்தலாற்சுதந்தரவறிவுடைய வேறேயொருஈசுரன்வேண்டுதலாலும் அபஞ்சீகிருத பூதங்களின்சத்துவகுணசமஷ்டியிற்புத்தியுண்டாயிறத்தலாலுங்கூடாது.

பவுத்தனானவன்-பிரியமிருக்குங்காலத்திற்சிருட்டிநடக்கிறது பிரியமில்லாத காலத்திற்

சிருட்டி நடக்கவில்லையாதலாலானந்த மேசக த்காரணம்-வேறேயொரு தெய்வமில்லை யெ ன்பது-சுயவானந்தமாயில்லாது-ஆத்மப்பிர திபிம்பானந்தமா யிருத்தலாலுஞ் சிருட்டிக் கிறதற்கவ்வானந்தத்துக்குச் சுதந்தர வறிவில் லாதிருத்தலாற் சுதந்தர வறிவுடையதெய்வம் வேறேயொருவீஸ்வரன்வேண்டுதலாலும் அவ் வானந்தம் அவித்தையிலுண்டா யிறத்தலாலு ங்கூடாது.

பிரசாபத்தியன் - ஆனந்தமயனுண சீவன் கிஞ்சிக்ஞனுனதினுலும் நினைத்தபிரகாரஞ்சி ருட்டிக்கக்கூடாதிருத்தலாலுஞ் சர்வக்ஞனுய் நினைத்தபிரகாரஞ் சிருட்டிக்கின்ற பிரமாவே ஜகத்காரணம்வேறே தெய்வமில்லை யென்ப து-பிரமாவானவன் அவனுடைய பஞ்சிரசி லொருசிரசைக்கிள்ளினகாலத்திலதைச் சிருட் டித்துக்கொள்ள வல்லமையில்லாதவனுதலா லும் விட்டுணு விஹுந்தியிலுதித்துப் பிரளய த்திலொடுங்குகையினுலுங்கூடாது.

வைணவன்-விஷ்ணுவினுந் திக்கமலத்தில் பிரமாபிறந்து ஜகசிருட்டி பண்ணுகையால் விஷ்ணுவேஜகத்காரணம் வேறொரு தெய்வ மில்லையென்பது, பிருந்தையைச் சிருட்டித் துக்கொள்ளசத்தி யில்லாத்தினுலும் விஷ்ணு

சிவனுமுண்டாக்கியொழிக்கப்படுகையினாலு ம்கூடாது.

சைவாகமக்காரர்-சிவனது பாதம் விஷ்ணு க்காணாதபடியினால் சிவனே- ஜகத்காரணம்வே றொருதெய்வமில்லையென்பது, சிவனாகிய உ ருத்திரன் மாயையிற்றோன்றியொடுங்குதலா ற்கூடாதெனவுங்கொள்க.

தாற்பரியம்.

தத்வமசிவாக்கியத்தினால் அகண்டமாயும் அத்துவிதமாயும் அபரிச்சின்னமாயும் விளங் கும்பிரம சொரூபத்தைவணங்கினதாம் (க)



(அ-கை.) முற்செய்யுளிற்கடவுள் வணக்க ங்கூறியிச்செய்யுளில் நித்தசுத்த புத்தமுத்த சத்திய பரமானந்தாத்து விதமானஅக்கடவு ளைசீவர்கள்படுந் துன்பத்தைப்பார்த்து அ தைநீக்கும்படி நீராலாங்கட்டியானது போல வும் நெய்தடித்ததுபோலவும் வடிவமின்றிய வாகாயம் வடிவமானதுபோலவும் மானிடச்ச ட்டைசாத்தியெழுந்தருளி வந்ததமது ஞான சாரியனைவணங்கித் துதிக்கின்றார்.

(கவி) இருவிழிகளுலகறிந்துந் தனையறி யாதது போலியானறியும் பொருளலதிங்கெ

னையறியாமையினற், கருவிடைபுக்கின்பது ன்பக்கடலிடையே சுழன்று கண்கலக்கப்படு வேனைக் கருணைவிழியதனால், அருவினைகள றநோக்கியாணவமே போக்கிய கமசமென்றி ருந்தவெலா மறிவுகொண்டேநீக்கிப், பருவ மதிற்பதந்தாக்கிக்கற்பனை களியாவும் பாழா க்கித்தானுக்கும் பரகுருவைப்பணிவாம்.

(இ-ள்) இருவிழிகள்-உபயநேத்திரங்களா னவை-உலகறிந்தும்-கடபடாதியான பிரவஞ் சத்தையுணர்ந்தும் அக்கடபடாதியாகாரமாகி ன்றதேதவிர - தனையறியாததுபோல் - அக் கண்களினியல்பையறியாதிருக்கின்றது போ ல - இயானறியும்பொருளலது - நான்சராசர ப் பிரபஞ்சங்களையறிந்துமென்னாலறியப்ப ட்டவப்பிரவஞ்சாகாரமானதேதவிர- இங்கெ னையறியாமையினால்- ப்ரத்தியட்சமாகியவெ னது எதார்த்த சொரூபத்தைத் தெரிந்துக் கொள்ளாமையினால்- கருவிடைபுக்கு- மாதா வினதுகருப்பத்தின்கணுற்று- இன்பதுன்ப- சுகதுக்கமாகிய- கடலிடையே- சமுத்திரமத் தியிலே-சுழன்று- சுற்றி-கண்கலக்கப்படுவே னை- மனம்நொந்து அழுகின்றவென்னை-கரு ணைவிழியதனால்-கிருபாதிருஷ்டியினால்-அரு வினைகளற - எனது அரிதாகியசஞ்சிதவினைக

ளொழியும்படி- நோக்கி- பார்த்து- பருவமெதி ல்- பக்குவகாலத்தில்- பதந்தாக்கி- திருவடி தீட் சைசெய்து. ஆணவமேபோக்கி- அறியாமை யைநீக்கி - அகமகமென்றிருந்தவெலாம்- நா னென்றிருந்தவனைத்தையும் - அறிவுகொ ண்டே - ஞானத்தினாலேயே- நீக்கி- வேறாக்கி கற்பனைகளியாவும்- ஆரோபமானவவையனைத் தையும் - பாழாக்கி- மித்தையாக்கி- தானுக்கு ம்- அம்மித்தைலயைபுந்தன்மயமாக்கின - பர குருவை- மேலாகியஞானாசிரியரை- பணிவா ம் - வணங்குகின்றோம்- எ- று,

(பதசாரம்) பிறத்தல் முதலியபஞ் சகோசத்தின்சட்பாவ விகார மாகியும் பெ ண்டுபிள்ளைபண்டபதார்த்தமாகியபிரவஞ்சா காரமாகியும போனேனே யல்லது அகண்ட வறிவானவெனதுஎதார்த்தசொரூபத்தையறி டவில்லையதனாலென்பார்- இயானறியும்பொ ருளலதிங்கெனை யறியாமையினாலெனவும் -ப ழுதையை யறியாதவஞ் ஞானத்தினாலே பா ம்பு தோன்றுவதுபோலஆத்மாவை அறியா தவஞ்ஞானத்தினால்கருப்பத் தின்சணுற்றெ ன்பார்கருவிடைபுக்கெனவும்- சுகதுக்கங்கள ளவிடப்படாததென்பார்- இன்பதுன்பக்கட லெனவும் - தாபத்திரயமாகியவச்சுகதுக்ககந்

ள்மாறிமாறிவருதலால் வருத்தமுற்றென்பார்-
சுழன்றெனவும்— அந்தகனொருவனிதுமேடு
பள்ளமுடையவழியிதுநல்லவழியென்று செ
ல்வதற்குத் தெரியாமற் றுன்புறு கின்றது
போலத்துன்பமான பந்தத்தை நீக்கி யின்ப
மான மோட்சத்தை யடைய வுபாயந்தெரி
யாமையினால் வெய்யிற்புழுப்போல்வருந்து
கின்ற அதிதீவரமுமுட்சுவென்பார் - கண்கல
க்கப்படுவேனெனவும்— சடமானமச்சமான
துதனது நேத்திர திருஷ்டியினாற் றனது சி
னைகளவ்வுருவ நீங்கித் தன்னுருவமாகும் படி
பார்க்கின்றதுபோல சின்மாத்திரசொரூபமா
கிய ஆசிரியர்தன்னையடுத்த சீடனது அற்பமா
ன ஆகாமிய பிராரத்தகன் மங்களுக்கேதுவா
கிய மிகுதியானசஞ்சித வினை நீங்கி அச்சிடன்
றன்னைப் போலச்சின்மாத்திர சொரூபமாகு
ம்படி தான்பிரமத்தியானம் பண்ணி அத்தி
யானத்துடன் பார்ப்பதாகிய கிருபாநேத்தி
ரத்தினாற் பார்த்தென்பார் கருணைவிழியதனா
லருவினைகளறநோக்கியெனவும் — சடமான
கோழியானதுதனதுகரு முட்டையை நீங்கித்
தன்னுருவாகும்படி பரிசித்துப் பக்குவத்திற்
குஞ்சுபொரிப்பதுபோல் சித்ரூபமாகிய ஞா
னாசிரியர் தன்னுடைய சீடனது தேகவுருவநீ

ங்கித்தன்னைப்போலச் சித்துருப மாகும்படி சாதனங்கள் நிறைந்தபக்குவத்திற் றிருவடி தீட்சைசெய்தென்பார் - பருவமதிற்பதந்தாக்கியெனவும் — குளவியானது தாமெடுத்து வைத்தபுழுவினதுருவத்தைச் சத்திக்கின்றதினால் நீக்கித் தன்னுருவமாகச் செய்கின்றதுபோலஞானாசிரியர்தனது சிடனறியாமையையுந்தூல முதலொன்பதும் விராட்டு முதலொன்பதுமாகியதேகாதியைத்தானென்பதையும் கர்மபத்தி யோகங்களில்நீக்கக்கூடாதாகையால்மகாவாக்கியவுபதேசஞ்செய்துஅகண்டாகாரவிருத்திஞானத்தைக்கொண்டே நீக்கிச்சர்வசாட்சியாகியசொரூபமாக்கினரென்பார்- ஆணவமேபோக்கிய கமகமென்றிருந்த தெலாமறிவுகொண்டேநீக்கியெனவும் — தேதிகளையப்பட்ட சீவிஸ்வர ஜகத்தைக்கானற் சலம்போலமித்தையாக்கினரென்பார் - கற்பனைகளியாவும் பாழாக்கியெனவும் — பழுதையிற்றோன்றியவாரோபிதசர்ப்பம் பழுதையேயாவதுபோல அம்மித்தையாதோற்றத்தையும்பரிபூரணப்பிரமமாகிய தன்வடிவாக்கினரென்பார் - தானாக்குமெனவும்—சீவதுரியம்-பரதுரியஞ்சிவதுரியமாகிய விவைகட்கப்பால்விளங்குந்துரியாதீதசொரூபமென்பார் பரகு

ருவெனவும்— அத்தன்மையவனுபவத்திலிரு க்கின்றேமென்பார் - பணிவாமெனவுங்கூறி னார்.

தூலமுதலொன்பதாவன-தூலசரீரம் - சூ ட்சுமசரீரம்-காரணசரீரம் - சாக்கிராவஸ்தை சொப்பனவஸ்தை-சுழுத்தியவஸ்தை - விசுவ ன்-தைசதன்-பிராக்ஞனெனவும்- விராட்டுமு தலொன்பதாவன-விராட்டு இரணியகர்ப்பம் அவ்வியாகிருதம்- சிருட்டி - திதி-சம்மாரம்- வைசுவாநரன் - சூத்திராத்மா - அந்தரியாமி யெனவுமறிக.

(இ-ம்) அபக்குவனுயனுத்மாவேதானென்றி ருக்குமூட-னும் சிவகாருண்ணிய முதலியநா ன்குமேதிருமேனியா யெழுந்தருளி யிருக்கி ன்றஅகண்டபரிபூரண சச்சிதானந்தப்பிரம சொரூபமாகியஞானசாரியனாயடைந்தாற்ப ரமான்மாவாவனென்பதாம். (௨)



(அ-கை.) கல்விமுதலியநற்குணங்கள்கெ ர்வமுண்டாயின்வீணாய்க் கெடுமாகலின் இந் நூலாசிரியரப்படிக்கு வித்யாகெர் வந்தமக்கி ன் றென்பதறிவிக்குநிமித்த மவையடக்கங்கூ றுகின்றார்.

(கவி) முன்புசெய்த தவப்பயனுன்மூத றிவின்பயனுன்முன்னுரைத்தபன்னூலின்முறைதெரிந்தபயனு, லன்புசெய்து சற்குருவினருள் படைத்தபயனுலடைந்தவர்செய்தொழில்காட்டுமறிவிலியேபோலத், தன்புதல்வர்க்கிரங்கியதாயெனவுலகோர்க்கெல்லாஞ். சங்கரசற்குருவருள்வேதாந்த நன்னூற்பொருளை, வன்புகொடுதமிழ்போலுந் தமியேன்புன் கவியால்.வகுத்துரைப்பேனெனத்துணிந்தவாய்மதர்ப்புமிதுவே.

(இ-ள்) முன்புசெய்த-பூர்வசுன்மங்களிற் பண்ணிய-தவப்பயனுல் - மகாதபோபலத்தினுலும்-மூதறிவின்- முதிர்ந்த விவேகத்தினுடைய- பயனுல்-பலத்தினுலும்-முன்னுரைத்த-அனுதியாய்க் கூறப்பட்டிருக்கின்ற - பன்னூலின்-பலசாத்திரங்களின் - முறைதெரிந்த -கிரமத்தையறிந்ததின்-பயனுல்-பிரயோசனத்தினுலும்-அன்புசெய்துசற்குருவின் ஞானசாரியாருக்குப்பணிவிடைசெய்து அவருடைய- அருள்படைத்த. அனுக்கிரகம் பெற்றதின்-பயனுல்- பேற்றினுலும் - அடைந்தவர் - பிரமானந்தத்தைப்பெற்றவர்கள் - செய்தொழில்-பண்ணுகின்ற கிருத்தியம்போல-காட்டும். பாவனையாகக் காட்டுகின்ற - அறிவிலியே

போல்- மூடனேபோன்று-தமியேன்-நாயே ன்- தன்புதல்வர்க்கு-தனதுசுதருக்கு-இரங்கி ய-அருள்சுரக்கின்ற - தாயென- மாதாவைப் போல- உலகோர்க்கெல்லாம் - மூமூட்சுகளா னவருக்கு முபயோகமாக - சங்கரசற்குருவ ருள் -சங்கராசாரிய சுவாமிகளெனும்நாமதே யத்தை யுடைய ஞானதேசிகர் கீர்வாணத்திற் கூறிய - வேதாந்தநன்னூற்பொருளை-உபதி டதமுடிவான மகாவாக்கியநூலை-வன்புகொ டு,புத்தியின்றிடத்தைக்கொண்டு- தமிழ்போ லும்- செந்தமிழ் போன்று- புன்கவியால்-பு ல்லியசெய்யுளால்- வகுத்துரைப்பேனெனத் துணிந்த- பகுத்துக்கூறுவேனெனத்துணிவு கொண்ட- வாய்மதர்ப்புமிகு- வாக்கின்கர் வத்தாலுண்டானதிந்நூலாம்-எ-று.

(ப-ம்) பூர்வஜன்மங்களில் நிட்காமியமாகச் சாந்தராயனமாதி விரதம் பஞ்சாக்கினி மத் தியாதி தவம்யாகாதி கருமங்கள்பிரமாதிதே வவுபாசனை இயமாதியட்டாங்க யோகமாகிய இவைகளாலுண்டான பாவநிவர்த்தியும் சித்த வேகாக்கிரமுமென்பார் - முன்புசெய்த தவ ப்பயனெனவும்- அவற்றுற் சார்முதற்றுபா மீறுகியவெழுவகைப் பிறவியினுள்ளுந்துன் புமையன்றியின் பமில்லை யென்னும் விவேக

த்தால்எப்போதுஜன்னமரணத்தைநீங்கிமோ
க்ஷமடைவோ மென்றுண்டான கவலையென்
பார்- மூதறிவின்பயனெனவும்-அதனாலவை
களுக் குபாயஞ்சொல்லாநின்ற நூதனகற்பி
தமின்றியநாதியாயுள்ளவேதாதிபலசாத்திரங்
களிற்பிரமமாத்திரஞ் சத்தியம்மற்றசீவேஸ்வ
ரஜகத் அசத்திய மென்கிற கிரமத்தை விசாரி
த்தறிந்ததனாலுண்டான சாதனசதுட்டயமை
த்திரியாதி குணங்களென்பார்- முன்னுரைத்
த பன்னூலின்முறைதெரிந்த பயனெனவும்
-அவைகளாற்றலை ரோமத்தில்நெருப்புப்பற்
றிக்கொண்டவனைப்போலவும்சிலதினபட்டி
னிக்காரனைப்போலவும் மடவூருங்காமியை
ப்போலவும்அதிதீவரபக்குவமுற்றுப்பிரமக்
கியாநாதி நான்குமோர்திருமேனியெனக்கொ
ண்டெழுந்தருளியஞானாசாரியனையடைந்து
அவருக்குஆப்தம் அங்கந்தானஞ்சத்பாவமாகி
ய நான்குவிதப்பணிவிடைகளைச்செய்துமகா
வாக்கிய அனுக்கிரகம்- பெற்று அதனாலுண்
டானதத்துவ ஞானமென்பார் - அன்புசெய்
து சற்குருவி னருள்படைத்தபயனெனவும்-
இங்ஙனம் தத்துவ ஞானம் பெற்றதனாற் பிர
மாணந்தமுற்றஞானிகள்வாக்காதியில்நிகழுஞ்
செயல்களை மேற்கூறியவற்றுள் ஒன்றுமின்

றிய அஞ்ஞானியானவன் பாவனையாய்க்காட்டுதல்போலென்பார்- அடைந்தவர்செய்தொழில்காட்டுமறிவிலியே போலெனவும்- துர்ப்புத்திரனையும் தாயானவளமுதூட்டி வளர்த்தல்போல அபக்குவானும் பிழைக்கும்பொருட்டுவைராக்கியாதியாறு லட்சணமுமுடையசங்கராசாரியசுவாமிகள் பேரருளினாலேஅறிவைவளர்த்தற்குக் கூறிய உபநிடத முடிவாகியமகாவாக்கிய நூலென்பார்- தன்புதல்வர்க்கிரங்கியதாயென வுலகோர்க்கெல்லாஞ் சங்கரசற்குருவருள் வேதாந்தநன்னூற் பொருளெனவும்- அந் தச்சுவாமிகளுக்குள்ளபேரருளும் பூரணஞானமுமில்லாதயான் அகங்கொண்டுகூறியதிதுவென்பார் - வன்புகொடுதமிழ்போலுந்தமியேன்புன்கவியால்வகுத்துணைப்பே னெனத்துணிந்தவாய்மதர்ப்புமிதுவெனவுங்கூறினர்.

வி,ம்-மைத்திரியாதிகுணங்களாவன -மைத்திரி-கருணை-முதிதை- யுபேட்சை - நிராசை-பொறுமை-உதாரம்-சாந்தியாதி எனக்கொள்க-வைராக்கியமாதியாறுலட்சணமாவன-வைராக்கியம்-சாபானுக்கிரகசாமார்த்தியம்-அஞ்ஞானலட்சணமறிந்தகற்றியிருத்தல்ஞானலட்சணமறிந் தடைந்திருத்தல் - சீவேசுரவுற்ப

த்திநாசத்தை யனுபவமாயறிந்திருத்தல் - அ வித்தைமாயையுற்பத்திநாசத்தை யனுபவமா யறிந்திருத்தல்- எனவறிக.

(இ-ம்) திரிவிதவுலகத்தும்பரிபூரணஞானி யருமையாயுமவராற்பிரயோசனமடைபவரே கதேசமாயும் அவனைப்போற் பாவனையாகக் காட்டுகின்றவர்க ளருமையில்லாமலு மவர்க ளாற்பிரயோசனம்அடைபவர் அனேகராயுமி ருப் பதுபோலவும் - இராசாவினிடத்துள்ள மாங்கனியைப் பெற்றனுபவிப்போரேகதே சமாயும் சேவகன்கையி லிருக்கின்றமாங்கனி யைப் பெற்றனுபவிப்போரனே கராயுமிரு ப்பதுபோலவும் ஆரியபாஷைக்கதிகாரமும் அதிகவிற்பத்தியு முள்ளவர்களால் ஆரியபா ஷையி லுள்ளமகாவாக்கிய நூலினுற் பயன் பெறவேண்டியிருப்பதால்அதனூற்பயன்பெ றுவர் ஏகதேசமுந்திராவிட-பாஷையிலுள்ள இந்த மகாவாக்கியநூலினுற் சகலரும்பயன டைவதாயிருப்பதாலிதனூலடைபவரனேகரு மாமென்பதாம். (௩)



(அ-கை) இந்நூற்குரியவதிகாரிலட்சணமு மிந்நூலுண்டானவரலாறுங்கூறல்.

(கவி) வேறு- சற்குருவினருளாலுந்தவமு டிவின்பயனாலுஞ்சனனநீங்கிச், சிற்கனவாழ் வடைவதற் கேசிந்தைசெயுந்திறமுடைய சில ராகி, நிற்குநிலைசாதனங்களொருநான் குமறை நான்குநீந்தியோக, வற்கமொடுசகலகலைகளு ந்தேர்ந்துஞானநெறிவருவராமால்.

(இ-ள்) சற்குருவின்-ஞானசாரியருடைய அருளாலும்,கிருபையினாலேயும்'தவமுடிவி ன்-முடிந்ததவத்தின்-பயனாலும்- பலத்தினா லேயும்-சனனநீங்கி- பவமொழிந்து- சிற்கன வாழ்வடைவதற்கே - அகண்டவறி வானந்தத் தையே பெறும் பொருட்டு-சிந்தைசெயும்-க ருதுகின்ற-திறமுடைய- தன்மையையுடைய சிலராகி-நற்குணசாலிகளாகி - நிற்குநிலைசாத னங்களொருநான்கும் - நித்தியமானவொப்ப ற்றசாதனசதுட்டயத்தைப் பெற்று நின்று- மறை நான்கும்-இருக்காதிவேத நான்கினத்தி யயனப்பயனையும்-யோகவற்கமொடு-இயமா தியஷ்டாங்கயோகவப் பியாசப்பயனையும்-சு கலகலைகளும் - சாத்திரங்களனைத்தின னுட்டா னப்பயனையும்-தேர்ந்து-விசாரித்து- நீந்தி- அவைகளைவிடுத்து-ஞானநெறி-மோட்சமார் க்கத்தில-வருவர்-வாாநின்றமுமூட்சுக்கள்-ஆ ம்-இந்நூற்கதிகாரிகளாம்-எ---று.

(ப-ம்) அஞ்ஞானலட்சண மறிந்தகற்றியி ருத்தல் ஞானலட்சணமறிந்தடைந்திருத்தல்- சிவவுற்பத்தி நாசமனுபவமாயறிந் திருத்தல் ஈஸ்வரவுற்பத்திநாசமனுபவமாயறிந்திருத்த ல்-அவித்தை யுற்பத்திநாசமனுபவமா யறிந் திருத்தல்- மாயையுற்பத்திநாசமனுபவமாய றிந்திருத்தலாகிய ஆறு லட்சணமு முடைய ஞானாசிரியனென்பார்- சற்குருவெனவும்-சிர வணமனனதியான சமாதியாகிய சத்துவ தவ முடிவிலுண்டாகுந்தத்துவக்கியானமென்பா ர்-தவமுடிவின் பயனெனவும்- தலைரோமத் தினெருப்புப்பற்றிக் கொண்டவன் சார்வபூ மாதி செல்வங்களையு மிச்சியாமற்றுப நீக்கு வதாகியதண்ணீர் மட்டிலிச்சிக்கின்றது போ லச்சனனமரண துன்பமுடைய சிவசாயுச்சிய வரைச் சரீரமுத்தியையுங்கருதாமல்அசரீரமு த்தியாகியஅகண்ட ஞானந்த செல்வத்தில்மட் டுமிச்சையுடையமுமூட்சுவாகி யென்பார்-ச னன நீங்கிச்சிற்கனவாழ்வடைவதற்கேசிந்தை செயுந்திறமுடையசீலராகியெனவுப், அவதிப ரியந்தம்- நித்தியாநித்திய வஸ்துவிம்வகம் இ காமுத்திரார்த்தபலபோகவிராகம்- சமாதிசட் கசம்பத்தி - முமூட்சுத்துவமாகியஞானசாத னநான்குமடைந்தென்பார்- நிற்குநிலைசாதன

ங்களொருநான்குமெனவும்-வேதாத்தியயன த்தாற்பிரமலோகமாத்திரங் கிடைப்பதென்று ம்-அஷ்டாங்கயோகத்தாலணிமாதி சித்திகளும் பிரமலோகமுங்கிடைப்பதென்றும்-சமயசா ஸ்திரானுட்டானத்தாற் பதமோட்சங் கிடைப் பதென்றுமறிந்தவைகளை விடுத்தென்பார்,ம றைநான்குநீந்தியோகவற்கமொடு சகலகலைக ளுந் தேர்ந்தெனவும்- தேனிரம்பியமலரைத் தேடும்வண்டைப்போல சற்குருவைத்தேடிய டைந்துசிரவணாதி செய்பவனென்பார்-ஞான நெறிவருவனெனவுங்கூறினர்.

(அவதாரிகை) இதுவுமது.

(கவி) இப்படியேசாதனமுமன்பும்வணக்கமு ஞானத்தியல்பும் பூண்டிங்-கெப்படியாகிலும் பிறவாதிறவாமுத்தியிச்சித்தார்க்கியல்பதாகச் செப்பவல்லமகாவாக்கியத்திறமிதனையுலகோ ர்க்காய்ச் செப்பினேனென் - றப்படியோர் வீ டனுக்குச்சங்காராசாரியரன்றறைந்ததாமால்,

(இ-ள்) இப்படியே - முற்கூறிய வண்ண மே-சாதனமும் - சாதனசதுஷ்டயமும்-அன் பும்- சிரத்தையும்-வணக்கமும்- அடக்கமும் -ஞானத்தியல்பும் - ஞானத்துக் கேதுவானகு ணமும்-பூண்டு,பொருந்தி-இங்கு-இவிடத்தி

லேயே-எப்படியாகிலும் - எவ்விதத்தாலாயி னும்-பிறவாதிறவாமுத்தி - உற்பத்தி நாசமற் றபரமோட்சத்தை- இச்சித்தார்க்கு- அடைய வேண்டுமென்றுவிரும்பிய முமூட்சுகளுக்கு- இயல்பதாக-சுபாவமாக- செப்பவல்ல- உப தேசிக்கத்தகுந்த - மகாவாக்கியத்திறமிதனை- மேன்மையானவிம் மகா வாக்கியத்தை - உல கோர்க்காய்- சகத்திலுள்ள சகலபக்குவாளுக் குமுபகாரமாக-செப்பிநூமென்று- கூறுகி ன்றேமெண- அப்படியேயார்சீடனுக்கு-முன் மொழிந்ததுபோன்றுஅதிதீவிரபக்குவமுள்ள வோர்மாணுக்கனுக்கு-சங்கராசாரியர்-சங்கரா சாரியசுவாமிகள் - அன்றறைந்ததாம்-முற்கா லத்தில்விளம்பியதிதன்முதனூலாம்-எ-று.

(ப-ம்.) மோட்சமாத்திரத்தி லாசையுடன் அவதிபரியந்தச்சாதனங்கள்பெற்று-சத்குரு -சாத்திரம் சொரூபத்தில்- சிரத்தையுற்று-இ வையுண்டானதூறற் கெர்வமடையாமல மை த்திரியாதி குணங்கள்நிறைந்தென்பார் - இப் படியே சாதனமுமண்டபம்வணக்கமும் ஞான த்தியல்பும் பூண்டெனவும்.சாலோகாதிசிவசா யுஜயவணாப்படனிரண்டுபத மோட்சமு மன்னி யமான உற்பத்திநாசஞ் சீரந்துக்கமுள்ளவ பரமுத்தியானதால் அவையலல- அனன்னிய மாயுற்பத்தி நாசமற்றதாயகண்டா னந்தமாயு

ள்ளபரமுத்தியென்பார்- பிறவாதிறவாமுத்தி யெனவும்,- பாகியகன்மத்தாற் சித்தியாத தாயாந்தர்கன்மத்தாற்சித்திக்கிறதாயிருந்தாலும் அந்தப்படியேநிரந்தர நெடுங்காலநேசத்துடனே அப்பியாசஞ்செய்து பெற்றுக்கொள்ளுவோமென்னு மிச்சை யுடையதீவரதரமுமூட்சுவுக்குத் தடையில்லாமலுபதேசிக்கத்தகுந்ததென்பார். எப்படியாகிலும் பிறவாதிறவாமுத்தி யிச்சித்தார்க்கியல் பதாகச்செப்பவல்லதெனவும், பாவநீக்கும் நிடேதவாக்கியத்துக்கும் புண்ணியத்தைவர்த்திக்கும் விதிவாக்கியத்துக்கு மேலானசித்தார்த்தபோத வாக்கியமென்பார்-மகாவாக்கியத்திறமெனவும்.ஓர்பக்குவனுக் குபதேசிக்கிலவன்மட்டுக்கும்பிரயோசனமாகுமாகையான் மந்தமுதலியபக்குவாளும் பிழைக்கும்படிவியாசர் சூதருக்குத்தெரிவித்ததுபோல் ஓர்பக்குவனை முன்னிட்டுச்சாத்திரஞ்செய்தமதன்பார் - உலகோர்க்காய்ச்செப்பினேனென்றப்படியோர் சீடனுக்குச்சங்கராசாரியரன் றறைந்ததாமெனவுங் கூறினார்,

(இ உ-க-ம்-) சாதனமுஞ்சத்குரு கிருபையுந்தத்துவஞானமுமனறியிற் பரமோட்சமடையக்கூடாதென்பதாம். (ஈ)

(அவதாரிகை) நூற்பெருமைகூறுதல்.

(கவி.) அத்தகைமைபெற்றமகா வாக்கியந்தானெதெனில் வேதாந்தமாகிச், சுத்தபரிபூரணமுந்தோற்று சராசரநிலையுந் துணிந்தோர்க்கெல்லாம், பெத்தமதுநீங்குகையும் பெறும்பேறுமுரைக்கும்ரகசியப்பேறகு, முத்தரிதற்குண்மையு மீரைந்துளதென் றுரைப் பழதைமொழியுங்காலே.

(இ-ள்) அத்தகைமைபெற்ற, அவ்வளவுமகிமைபொருந்திய-மகாவாக்கியம்- மகாவாக்கிய நூலினிலக்கணம்- எதெனில்-இயாதென்று கேட்கின்-வேதாந்தமாகி-உபநிஷித்துசொரூபமாயிருப்பதன்றி-சுத்தபரிபூரணமும்-அமலமாயகண்டமாயிருக்குஞ்சொரூபத்தையும்-தோற்றுசராசரநிலையும்- ஆரோபமாயுண்டாகியபிரமாதிஸ்தம்பபூச்சிவரைசரமும்குறுமுளைமுதற்கற்பகவிருட்சம் வரை அசரமுமான பிரபஞ்சத்தி னிருப்பையும்- துணிந்தோர்க்கெல்லாம் - அனுஷ்டித்துத்தெளிந்தோரனைவர்க்கும் - பெத்தமது-பந்தமானது - நீங்குகையும்-நிவர்த்தியாகின்றதையும்- பெறும்பேறும்-இதனாலடையும்பயனையும் - உரைக்கும்-இந்நூற் கூறுகின்றது - ரகசியப்பேறகும்-மேனுமிந்நூலாலர்த்தரங்கமாய்ப் பயன்பெறத்தக்கதாகும்-இந்தநூலிற்கூறுமகாவாக்கிய

ங்களுக்குள்ள லட்சணமெத்தனையெனில். மு
த்தர் - அவித்தைநிவர்த்தியானவர்கள்-இதற்கு
-இந்நூலிற் கூறுமாவாக்கியங்களுக்கு - உண்
மையும்-உள்ள இலட்சணமும்-ஈனாந்துளமதெ
ன்று-பத்திருக்கின்றதென- உரைப்பர் - சொ
ல்லுவார்கள்-அதைமொழியுங்கால். அவைகளை
யுரைசெய்யுமிடத்தில்-எ—று.

(ப-ம்.) உபநிடதத்திலுள்ளவாக்கியங்களே
ஆரியபாஷையிலுள்ளமகாவாக்கியநூலிலிரு
க்கின்றதென்பார் வேதாந்தமாகியெனவும்-சீ
வாதிக்குள்ள அசுத்தமற்றதென்பார் சுத்தமெ
னவும்-தேசகாலவஸ்துவாகிய மூன்றுவிதபரி
ச்சேதமுமற்ற பிரமமென்பார்பரிபூரணமெ
னவும்- பழுதையினிடத்திற் பாம்பாரோபித
மாய்த் தோற்றுவதுபோல ஆத்மாவினிடத்தி
ல் அத்தியாசமாகச்சராசரப் பிரபஞ்சந்தோ
ற்றுதலென்பார்- தோற்றுசராசர நிலையென
வும்-விளக்கு யாவருக்கும் பொதுவாய்ப் பிர
காசங்கொடுப்பதுபோலப் பிராமணனானாலு
ம் நீசனானாலும் சமுசாரியானாலும் சந்நியாசி
யானாலும்பிரமமேசத்தியம்ஜகத்தசத்தியமெ
ன்று நிச்சயமுடையவர்களுக்கு, கட்டுபட்ட
வனுக்குச் சுதந்தரத்துவமின்மைபோலச் சா
ட்சிமாத்திரமாயிருக்குஞ் சுதந்தரமில்லாமற்
போகும்படிசெய்யும் பஞ்சகோசக்கட்டு நீங்

கலென்பார்-துணிந்தோர்க்கெல்லாம் பெத்தி மதுநீங்குகையுமெனவும்- மனுடானந்த முதலிரணியகர்ப்பானந்தவஸாயோர் திவலையாகத்தக்க பிரமானந்தசாகரமென்பார்பெறும் பேறெனவும்-புருடன் ஸ்திரீயிடத்திற் கலவியினின்பம் ரகசியமாய்ப் பெறவேண்டுவது போல இந்நூல் தனித்திருந்தனுட்டித்து அனுபவம்பெறத்தக்கதென்பார் - இரகசியப் பேருகுமெனவும்- அஞ்ஞானமு மதன்காரியமும் விடுபட்டவனென்பார்-முத்தனெனவுங் கூறினர்.

(வி-ம்) சாதிவர்ணாச்சிரமங்களதற்குச் சொன்னதன்மா தன்தங்கள் அதின் பலமான சொர்க்கநரகாதிகள் அவைகளின் விசேஷமான வனந்தகோடி சன்மங்கள் முதலான துடக்குப்பட்டலைகின்ற சீவர் கிருபையவதாரமாக்சரியமுதலான துடக்குப்பட்டிருக்கின்ற ஈஸ்வரன் சீவருடையசங்கத்தினால் அசுத்தப்பட்டிருக்கின்றபூதங்களிவைகட்கெல்லா மன்னியமாயிருக்கின்ற பிரபமித்தனைகளுடனுங்கூடி நின்றும் அதையசுத்தம் பற்றாத படியினாலும் அவையெல்லாம் பிரம விவர்த்த மானபடியினாலு மெப்போதுஞ் சைதன்னியமாயிருக்கின்ற பிரமஞ்சீவாத்துமினசுத்தம் பற்றாத சுத்தமெனவும் பிரமமான துதேசகால வஸ்து

வால் அபரிச்சின்ன மெனவரும், மூன்றுவி
சேஷம் யாதுக்குத் தேசத்தா லபரிச்சின்னத்
துவமென்றாற் போதாதோவெனில் ஆகாயஞ்
சகலதேசத்திலும்வியாபகமாயிருக்கின்றமை
யாலதற்குத்தேசத்தா லபரிச்சின்னத்துவ மா
கின்ற அகண்டத்துவம்வரும் அதை நிராகரிக்
குநிமித்தங்காலத்தினாலும்அபரிச்சின்னத்துவ
மெனும் இரண்டாம்விசேஷமும் வேண்டும்
அவ்வாகாயத்துக்குக் காலத்தினலபரிச் சின்ன
த்துவமில்லையாவெனிலது சிருட்டிகால த்திலு
ண்டாய்ப் பிரளயகாலத்தி லிறத்தலாலில்லை ஆ
னாலவ்விரு விசேஷமாத்திர ம்போதாதோவெ
னில் காலம்விபுவாயிருக்கின்றபடியினால் தே
சத்தினாலு மாகாசத்தினாலுமபரிச்சின்னமாயு
ந் தன்னாலல்ல தனக்குப்பரிச்சேதங் கூடாததா
யு மிருக்கின்றமையாலதற்கு அகண்டத்துவம்
வரும்- அதைநிராகரிக்கு நிமித்தம் வஸ்துவி
னாலும் அபரிச்சின்னத்துவமெனும் மூன்று
ம்விசேஷமும்வேண்டும் அக்காலத்துக்குவஸ்
துவினால்அபரிச்சின்னத்துவமில்லையாவெனி
ல் அது ஆகாசாதிவஸ்துவல்லாதபடியாலில்லை
ஆகையால்ஆத் மாவைத்தவிரக்- காலம்வஸ்து
தேசங்களுக்குத்திரி விதபரிச்சேத சூனியமா
ன அகண்டத்துவங்கூடாது- அப்படிப்பரமாத்
மாவுக்கும் நானிந்தத்தேசத்தி லிருக்கின்றே

னந்தத்தேசத்தி லிருக்கவில்லை யென்றுதேச த்திஞலும் நான்முன்வருடத்திற் பிறந்தேன் கொஞ்சநாளைக்குப்பின்னிறந் துவிடுவேனெ ன்றுகாலத்திஞலும் தான்பிருதிவியாதிக ளல் லவென்று வஸ்துவிஞலும்பரிச் சின்னத்துவ மிருக்கிறதேயெனில் அது அத்தியாசமாய்த் தேகத்தை யபேட்சித்துவருகிறதேதவிர ஆத் மாவுக்கில்லை கடமிருக்குது படமிருக்குதுபி ருதிவியிருக்குது அப்புவிருக்குது வென்று பூதபவுதிகமாகியசமஸ்தபிரபஞ்சத்திலும் ஆ த்மாவியாபகமாயிருப்பதாற் றேசத்தாலபரிச் சின்னத்துவமும்ஆத்மா அஞதியாயிருப்பதா ற்பூதகாலத்தாலும் நித்தியஞயிருப் பதாற்ப வுஷியகாலத்தாலுமபரிச்சின்னத்துவமும்சர் வாத்மஞயிருப்பதாலும்சுசாதிவிசாதிசுவகத மாகியமூன்றுபேதமுமில்லாதிருப்பதிஞலும் வஸ்துவாலபரிச்சின்னத்துவமும் ஆத்மாவுக் கிருக்குதுஅப்படி-அல்லகடமிருக்குதுதேவத த்தனிருக்கிருன் சைத்திராத்மாவென்று சுசா திக முஞ்சுசாதிகபேதமும் பிருதிவியாதியெ ன்றுங்கடாதியென்றும் விசாதிகமும் விசாதி கபேதமும் இச்சாத்துவேஷிசத்து வரசோத மசென்று சுகதமுஞ்சுகதபேதமுமிருக்குதே யெனில் - ஆகாசமுபாதியாற் கடாகாசாதியாக த்தோற்றல் போலாத்மாவுஞ் சரீரவுபாதியாற்

றேவதத்தனுதியாகத் தோற்றலாற்சுசாதிபேத மும் - பிரபஞ்சம்சத்தாகையால்விசாதிபேத மும் - இச்சையாதியந்தக்கரண சுபாவமாகை யாற்சச்சிதானந்தமாத்திரவாத்மாவுக்குச்சுவக தபேதமுமில்லை- சத்துச்சித்துஆனந்தமெ ன்னும் பேதம்ஆத்மாவுக்கில்லையோ வெனில் குளிரிளகல்வெண்மை யென்னும்பேதம்நீரு க் கில்லாததுபோற் பேதமில்லை இந்தப்பிர காரமாய்ப்பிரமந்தேசகாலவஸ்துவாகியமூன் றுவிதபரிச்சேதமும் அற்றபூரண மெனவும் -அழகிளமையாரோக்கியந்திடகாத்திரஞ்சகல ஞானமுஞ்செயிக்கும்பெலமுடையவனுய்ச்சகல சாஸ்திரமும் வல்லவனுய்ச்சகலராலும்வாழ்த் தப்பட்டவனுயிருந்து ஐம்பதுகோடிபூமண் டலமும்ஓர்குடைக்கீழாள்பவனுக்கு மனுடா னந்தம்- இதற்குமேல் மனுடகெந்தருவனான ந்தம்-பிதிர்தேவனானந்தம் - பிறவித்தேவனா னந்தம்- கருமதேவனானந்தம்தேவானந்தம்- இந்திரானந்தம்-பிரகஸ்பதிஆனந்தம்- விரா ட்புருடனானந்தம் இரணியகருப்பனானந்தம் ஆகியஇவைகளொன்றுக்கொன்று நூறுபங்கு அதிகமாயின வதிசயமுடையதாய்அளவுபட் டதாய்அனித்தியமாய்அனர்த்தமாய்அன்னிய மாய்ப்பங்கிட்டனுபவிக்கிறதா யிருக்கை பா

ற்பிரமானந்த சாகரத்துக் கோர்திவலையாகு மெனவுங்கொள்க.

(இ-ம்) தனித்தேகாக்கிரமாயனுஷ்டியாவி டிலிதனாற்பயனுண்டாகாதென்பதாம். (௬)

(அ-கை-தசகாரியநாமங் கூறல்.)

(கவி) பழமறையினந்த மகா வாக்கியங்களு ன்கதனுற்பத்திபேதங் - குழைவுதருமகிமை யதன்பிரகாசமஞ்ஞானக்குடும்பநீக்கந் தழை யுமதற்கவதியதினிண்ணயம் பெற்றோர்கதை சாதகர்தியானம் - பிழையிலதனுரையிவையீ ரைந்து புண்மையிதனைடைவ பேசலுற்றும்,

(இ-ள்) பழமறையின் - அனாதியான இருக் காதிநான்குவேதங்களின் - அந்தம்-முடிவாகி யஞானகாண்டத்திலுள்ள-மகாவாக்கியங்களு ன்கதனுற்பத்தி-நான்கு மகாவாக்கியங்களினு ற்பத்தியும்-பேதம்-வாக்கியபேதமும்? குழை வுதருமகிமை-சித்தத்தைக்கரைக்கப்பட்ட வா க்கியமகிமையும- அதன்பிரகாசம்- அவ்வாக்கி யப்பிரகாசமும்- அஞ்ஞானக்குடும்பநீக்கம்- வாக்கியத்தாலஞ்ஞானத்துக்கபேதமாகியசமு சாரநிவர்த்தியும்-தழையும்-மேலான-அதற்கு -அவ்வாக்கியத்துக்கு- அவதி-அவதியும்- அதி னிண்ணயம் - அவ்வாக்கியத்தினுடைய நிண் ணயமும் - பெற்றோர்கதை-வாக்கியத்தினுவ டைந்தவர்களின துகதையும்-சாதகர்அப்பியா

சிகளின் - தியானம்-வாக்கியத்தியானமும் - பி
ழையிலதனுரை-குற்றமற்ற வாக்கியவுரையும்
-இவையீரைந்து-ஆகியவிந்தப்பத்துக் காரிய
மும்-உண்மை- அவ்வாக்கியங்களின் எதார்த்த
லட்சணங்களாம்- இதனடைவே-இக்கிரமப்ப
டியே-பேசலுற்றும்-கூறுகின்றேம்-எ-று.

(ப-ம்) ஆகமாதிகள்போலவுற்பத்தியின்றி மீமாம்சையார் நிச்சயப்படிஅனாதியானவேதமென்பார்பழமறையெனவும்-வாக்கியங்கள் கேட்டமாத்திரத்திற் சித்தத்தைக்களைத்துப்பிரமானந்தங்கொடுக்கப்பட்டதென்பார்குழைவுதருமெனவும்-மற்றவாக்கியங்களுக்குமேலானதென்பார்-தலைமையுமெனவும்- சித்தாந்தவாக்கியமென்பார்- பிழையிலதெனவுங் கூறினார்.

(இ-ம்) தசகாரியங்களைக் கூறத்தொடங்கினதாம்.

பாயிரம்-முற்றிற்று.



நூல்.

(அ-கை) வாக்கியவுற்பத்திக்கூறல்.

(க-வி) முந்தியவேதோற்பத்தி பிரக்ஞானம்
பிரமமெனமொழியும்வாக்கியஞ்- சிந்தைசெ
யுமிரண்டிலகம் பிரமாஸ்மியெனும் வாக்கிய
ஞ்செப்புமூன்றில், தத்தொமசியெனும்வா
க்கியநாலாவதயமாத்மாப் பிரமமென்னவந்த

வித்தவாக்கியந்தானதர்வணத்திலுற்பத்திவகுத்தவாறே.

(இ-ள்) முந்தியவேதம்- முதலாவதான இருக்குவேததைத்திரிய வுபநிடதத்தில் - பிரக்ஞானம்பிரமமென - பிரக்ஞானம் பிரமமென்று- மொழியும்வாக்கியம்- சொல்லும்லட்சணவாக்கியத்தின்-உற்பத்தி - உற்பத்தி கூறப்பட்டிருக்கின்றது- இரண்டில்- இரண்டாவதானஎசுர்வேதத்தைத்திரிய வுபநிடதத்தில்-அகம்பிரமாஸ்மியெனும்- அகம்பிரமாஸ்மியென்றுசொல்லும்-சிந்தைசெயும்வாக்கியம் சீடன்றியானிக்கின்றவாக்கியத்தி னுற்பத்திசொல்லப்பட்டிருக்கின்றது - மூன்றில்- மூன்றுவதானசாமவேதத்து சாந்தோக்கியவுபநிடதத்தில் -தற்தொமசியெனும் - தததொமசி யென்று சொல்லும்-செப்பும்வாக்கியம்- ஆசிரியருபதேசிக்கின்றவாக்கியத்தி னுற்பத்து சொல்லப்பட்டிருக்கின்றது- நாலாவது- நான்காவதான-அதர்வணத்தில்-அதர்வணவேதத்துமாண்டோக்கியவுபநிடதத்தில் - அயமாத்மாப்பிரமமென்னவந்த- அயமாத்மா பிரமமென்று சொல்லும்-இந்தவாககியம்- இச்சாட்சாத்காரவ ‑க்கியத்திஹற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது- உற்பத்திவகுத்தவாறு - வாக்கியங்களி

னுற்பத்திசொல்லப்பட்டிருக்கின்ற திவ்வித மாம்-எ— று. தான்-ஏஅசைகள்.

(இ-ம்) வாக்கியத்தைநம்பியனுட்டிக்கும்படி சகலருக்கும்பிரமாணமாயுள்ளவேதத்தினுபநிடதத்திலுற்பத்திசொல்லப்பட்டிருக்கின்றதென்று அறிவித்ததாம். (அ)

(அ-கை) மகாவாக்கியம் நான்காய்ப்பேதப்பட்டதிவ்விதத்தினுமெனக்கூறல்.

(கவி) பேதமென்பதாசானுஞ் சீடனுமுத்தரஞானம்பிரமமென்று, ராதநுவேதென்றுணாத்தானகமென்றுமாந்தவகமென்றுன்றிடன், மாதவநின்மேறகமகஞ் சொரூபமகமிரண்டுமலமறருமென்று, மீதுவினுலிரண்டுபட்டதென்றுமெனல்லாம் பிரமமென்று னெங்கோன்.

(இ-ள்) பேதமென்பது- வாக்கியங்களின் பேதமென்றுசொல்லப்படுவது-ஆசானும்-குருவும்-சீடனும்-மாணுக்கனும்-உத்தரங்கூறிய உத்தரப்பிரிதியுத்தரங்களினுலுண்டாயிற்று- எங்ஙனமெனில்-ஞானம்பிரமமென்றார்- அத்துவிதபிரமசொரூபத்தையறிந்தாற்சமுசாரதுன்பமகலுமென்றுணர்ந்துஞாசிரியனாயடுத்தசீடனுக்கறிவேபிரமமென்பதாகஅவ்வாசிரியருபதேசஞ்செய்தார் - ஆதநுவேதென்றுணாத்தான்-அவ்வறிவுயாதென்றச்சீடன்வினு

வினுன்-அகமென்ருர்- நானென்றுவிளங்குகி ன்றதே அதுவென்ருசிரியருபதேசித்தார் சீ டன்- மாணுக்கனுனவன்- எந்தவகமென்ருன்- நான்பருத்தேன் நான்பசியாயிருக்கின்றேன் நான்பேசினேன் நான்கேட்டேன் நான்சங்க ற்பித்தேன் நான்நிச்சயித்தேன் நான்பிரியப் பட்டேன்நான்அறிந்தேன் என்றுவிளங்குகின் றதேஇவற்றுள் எந்தநானெனவினுவினுன்,மா தவ-மகத்தாகியதவமுடையசீடனே- நின்றே கமகம் உனது சரீராதிகளை நானென்கின்றது ம்-சொரூபமகம் - அந்தரியாமியை நானெ ன்கின்றதும்- இரண்டுமல . ஆகியவிவ்விருவ கையுமல்ல- மற்ருமென்ருர் - இவைகளுக்கு வேருனது அவ்வறிவாகு மெனவாசிரியரனு க்கிரகித்தார் - ஏதுவினுல் - சுவாமிகளிங்ஙனங் கூறிய மூலமாய்-இரண்டுபட்டதென்ருன்- அவி தமாய்ப் போயிற்றேடென்று அச்சீடன்வி ண்ணப்பஞ்செய்தான்,எங்கோன்-எமதிறைவ னுகியவவ்வாசிரியர்-எல்லாம்-யாவையும்- பிர மமென்ருன்-பிரபசொரூபமேயென்றுஅரு ளிச்செய்தார்-எ— று. அதுவென்பதுபகுதி ப்பொருள்விளுதி.

(ப-ம்) பஞ்சேந்திரிய வழியாய்ப் பஞ்ச விடயங்களைய றிகின்றஅறிவேபரிபூரணமான பிரமசொரூபமென்ருரென்பார்-ஞானப்பிர

மமென்றுரொனவும்-அவஸ்தாத்திரயத்தின் அ
ன்னுவயவிதிரேகங்களைக்காணுஞ் சாட்சியாய்
விளங்குகின்றகூடஸ்தனென்றுரொன்பார்- அ
கமென்றுரொனவும்- சிரவணாதிசத்துவதவமு
டையவனையென்றுரொன்பார்-மாதவமெனவு
ம்-துலசேகமுதலொன் ப[illegible]வாச்சியத்துக்கு
ம் அந்தரியாமிவனை யொன்பது வாச்சியத்து
க்கும் விலட்சணமானவனாகிய பிரமமென்
றுரொன்பார்-நின்றேகமகஞ் சொரூபமகபிர
ண்டுமலமற்றுமென்றுரொனவும்-பொன்னிலு
ண்டானகடகமாதியும்- மண்ணிலுண்டானகட
மாதியும் கடலிலுண்டான அலையாதியும்- இ
ரும்பிலுண்டான கட்டியாதியும் - பொன்-
மண் - கடல் இரும்பை விடவேறல்லாதது
போலப்பிரமத்தினிடத்தில் அத்தியாசமான
வாச்சியங்களாகிய சீவீஸ்வர ஜகத்தனைத்தும்
பிரமத்தைவிடவேறல்லவென்றுரொன்பார்-எ
ல்லாம்பிரமமென்றுரொனவுங்கூறினர்.

(வி-ம்) சீடன்- துவம்பதத்திலெற்தவகமெ
ன்றுகேட்கஆசிரியர் அதற்குத்தானுத்தரங்கூ
றியபின் அவன்தத்பதத்திற்குக்கேட்கும்படி
யிடம்வையாமல் நின்றேகமகஞ் சொரூபமக
பிரண்டுமலவென்றதையுஞ் சேர்த்துஉத்தரங்
கூறினரென்றறிக.

(இ-ம்) மோட்சமடைவதற்குச்சகலத்தை

யுந்திருக்குதிரிசியமாய்வேறுபடுத்திக் கண்டு அத்திரிசியமுந் திருக்கைவிட வேறல்ல வென்றறியவேண்டு மென்பதாம். (கூ)

(அ-கை)வாக்கியமகிமைகூறல்.

(கவி)முக்கியமாமகிமைசொலலின்முதன்மொழிக்காகாமியம்போமுடிவுகாணத்- தக்கவிரண்டாமொழியாற்சீவாத்மாப் பிரமமதாய்த்தானுய்நிற்கு-மிக்கரு மப்படிமூன்றும் வாக்கியத்தாலென்னநியா னென்றனீங்கு- நெக்குருகி நாலாம்வாக்கியத்தாற்சஞ் சிதவினையுநீங்குந்தானே

(இ-ள்)முக்கியமாம் - மேன்மையான-மகிமை-வாக்கியங்களின்பெருமையை- சொல்லின்-கூறுமிடத்து-முதன்மொழிக்கு-முதல்வாக்கியசிரவணவப்பியாசத்தினுல்-ஆகாமியம்,புண்ணியபாவம்-போம்-நீங்கும்-முடிவுகாணத்தக்க- ஆத்மசாட்சாத்காரமறியத்தகுந்த- இரண்டாமொழியால்- இரண்டாம்வாக்கியமனனத்தினுல்-சீவாத்மா-கூடஸ்தரோ-பிரமமதாய்-பிரமசொரூபமாய்-தானுய்-பிரம சொரூபமே கூடஸ்தராய்-நிற்கும்- இருக்கின்ற அத்துவிதானுபவமுண்டாகும்-இக்கருமப்படி-இந்தச்சிரவணமனன அப்பியாசத்தால் நிச்சயித்தபிரகாரம் மூன்றும்வாக்கியத்தால்-மூன்றும்வாக்கியநிதித்தியாசவப்பியாசத்தால்- என்னநியா

னென்றல்-தேகேந்திரியாதிகளைநானென்பதும்-செகத்தையெனதென்பதும்-நீங்கும் ஒழியும்-நாலாம்வாக்கியத்தால்-நான்காம்வாக்கியசரவணப்பிரயாசத்தால்-சஞ்சிதவினையும்-கட்டுப்பட்டபுண்ணியபாவவினையும்-தெக்குருகி-கெட்டு-நீங்கும்-அகன்றுபோம்- எ—று.

(ப-ம்)அனித்தியமாகாதமகிமையென்பார்-முக்கியமாமகிமையெனவும்- கடத்தின்விகாரமதைக்காண்கின்ற கண்ணுக்கில்லாததுபோலஇருபத்தெட்டுத்தத்துவங்களின்றொழிலாகியபுண்ணியபாவம் அவைகளை அறிகின்றஅறிவுக்கின்றெனத் தெரியவருவதுந் தவிரக்குதிரைச்சவாரியினாற்பிராமணனைக் கொன்றவொருபெரியவருக்குப்பாவநீங்கியதுபோலமுதல்வாக்கியசிரவணப்பிரயாசஞ் செய்வோருக்குப்புண்ணியபாவத் தொடர்பில்லாது நீங்குமென்பார்முதன் மொழிக்காகாமியம் போமெனவும்-வியட்டி அறிவாகியதானேபிரமாதிஸ்தம்பவரையிலுள்ள அறிவென்றுனைகாத்மாவாய்ச்சீவாத்துவிதஞ்சித்திக்குமென்பார்சீவாத்மாப்பிரமமதாய்த்தானாய்நிற்குமெனவும்- கானற்சலம்போலத்தேகாதிசெகத்துப்பொய்யாகிப்போய்பரிபூரணப்பிரமமேதானுமென்பார்-என்னதியானென்றல்நீங்குமெனவும்அங்ங

ணம்பரிபூரணமானபிரமத்தைவிடசஞ்சிதமெ
ன அற்பமும்வேறொருவஸ்துவில்லாமற்போ
ய்விடுமென்பார்சஞ்சிதவினையுநீங்குந்தானே
யெனவுங்கூறினூர்—

(வி-ம்) குதிரைச்சவாரியினுற்பிராமணனை
க்கொன்றவருக்கு அப்பாவ நீங்கிபவிவரமாவ
து- ஒரு பெரியவரெப்போதும்நாம் அகர்
த்தா-அசங்கன்- அசஞ்சாரி- அபோக்தா அறிவு
சொரூபமென்றனுசந்தானம் பண்ணிக்கொ
ண்டிருக்கிறவழக்கப்படியே ஒருநாள் அவ்வ
னுசந்தானத்துடன் குதிரைச்சவாரிசெய்யும்
போது ஒருபிராமணன் அக்குதிரைக்காலில
கப்பட்டிறந்துபோனதால் அப்பிரமகத்தியா
னது திரிலோகாதிபதியான தேவேந்திரனைப்
பிடித்து வருத்தஅவனிதன் மூலமறிந்து அப்
பெரியவரிடத்திற் பிராமணன் போலவந்து
தெரியாமற்பிரமகத்திசெய்தீரோ யெனக்கூற
அப்படியாவென்றனு சந்தானம் விட்டுக்கே
ட்கவே அப்பிரமகத்தி அவரைப்பற்றினதைக்
கண்டுதேவேந்திரன்அகல அவர்நமக்கேதிது
வெனஅனுசந்தானத்தைச் செய்தவுடன்அப்
பிரமகத்திமறுபடிதேவேந்திரனைப்பிடித்து
வருத்தஅவனதற்கேற்றகருமஞ் செய்ததில்-நி
வாரணம் பெற்றானெனவும்-மூதல்வாக்கியஅ
ப்பியாசத்தால்ஏகாத்மசித்தியால் - யானென

துநீக்கம்-சஞ்சிதநீக்கம்வாராதோவெனில் ஆசிரியர்போதித்தமட்டுக்கும்சிரவணத்தால் இருபத்தொன்பது தத்துவங்களில் அதன்தன்மையை மாத்திரமறிவதேதவிர - தானாத்மாவென்பதும் தேகாதிபொய்யென்பதும் எல்லாந்தானென்பதும் தெரியாதாகையால் வாராதெனவும- இரண்டாம்வாக்கியவப்பியாசத்தால்-யானென்பது நீக்கம். சஞ்சிதநீக்கம். வாராதோவெனில்-ஆசிரியர்போதித்தமட்டுக்கு மனனத்தால்தேகாதிஜகத்துக்குவிலட்சணமான - பூரணாத்மாதானெனத்தெரிவதுமாத்திரமேதவிர ஜகத்துக்குப்பொய்யாயும் எல்லாந்தானுயுந் தெரியாதாதலால். வாராதெனவும் மூன்றும்வாக்கியவப்பியாசத்தால்சஞ்சித நீக்கம்வாராதோவெனில்ஆசிரியர் போதித்தமட்டுக்கும்நிதித்தியாசனததால்பரி பூரணமான தனக்குவிலட்சணமான ஜகத்துப் பொய்யென்றமாத்திரந் தெரிவதேதவிர அவையுந்தானுகட்போகாததால் வாராதெனவும்-மூந்தினவாக்கியவப் பியாசத்திலேயே சித்திக்கத்தக்கதைப் பிந்தினவாக்கியவப்பியாசத்தாற்சித்திக்காதாவெனக்கேட்கவேண்டுவதின்று.

(இ-ம்) இவ்வாக்கிய நான்கையும் அநுட்டித்ததலாற்பிரமசாட்சாத்காரமுண்டானபோ

றிலும்பிராரத்தவினையையனுபவிக்கவேண்டு மென்பதாம்.

(அ-கை) இன்னவாக்கியத்தா லின்னதுபிர காசிக்குமெனக்கூறல்.

(கவி.) தூயபிரகாசந்தான் மூந்நியவாக்கி யமதனாற்றுலங்குஞ்சத்தே, யாயவிரண்டா மொழியாற்சித்துத்தான் பிரகாசமாகுமூன்றி, லேயதொருவானந்தம்பிரகாசநாலாம்வாக்கிய த்தாலெண்ணி- னேயபரிபூரணந்தான்பிரகா சமெனமறைகணிகழ்த்துமாறே.

(இ-ள்) தூயபிரகாசம்- பரிசுத்தமானவாக் கியப்பிரகாசத்தைச்சொல்லுமிடத்து-மூந்நி யவாக்கியமதனால் - இலட்சணவாக்கியமாகிய முதலாவதுவாக்கியவப்பியாசத்தினால்-சத்தே ஆத்மாவின்சத்துலட்சணமாத்திரம்- துலங்கு ம்-பிரகாசிக்கும்-என-எனவும்- ஆயவிரண்டா மொழியால்- அனுபவவாக்கியமாகிய இரண் டாவதுவாக்கியவப்பியாசத்தினால்- சித்துத்தா ன்-ஆத்மாவின்சித்துலட்சணமாத்திரம் - பிர காசம்-விளங்குமெனவும்-ஆகுமூன்றில்- உப தேசவாக்கியமாகிய மூன்றாவது வாக்கியவப் பியாசத்தினால்-எய்தொருவானந்தம்- பொரு ந்தாநின்ற ஒப்பற்றஆத்மாவினானந்தலட்சண மாத்திரம்-பிரகாசம்- துலங்குமெனவும்-என்

ணின்-விசாரிக்குமிடத்தில் - நாலாம்வாக்கியத் தால்-சாட்சாத்காரவாக்கியமாகியநான்காவது வாக்கியவப்பியாசத்தினல்-நேய-பிரியமான-பரிபூரணந்தான்- ஆத்மாவின்பரிபூரணலட்சணமாத்திரம் - பிரகாசம் - விளங்குமெனவும் -மறைகள் - இருக்காதிவேதங்கள்- நிகழ்த்துமாறு-கூறுகின்றவிதமாம் எ-று.

(ப-ம்.) விகாரமற்றபிரகாசமென்பார்தூயபிரகாசமெனவும்-தேகாதிஅனுத்மா தானென்றும் - ஆத்மாவில்லையென்றுமிருந்தவனுக்குச்சிரவணவப்பியாசத்தினல்ஆத்மாவுண்டெனவிளங்குமென்பார் துலங்குஞ்சத்தேயெனவும்-மனனவப்பியாசத்தாற்சமட்டிவியட்டிசரீரத்திரயமும் விலட்சண மாயவைகட்குவேறுனசாட்சிதானென விளங்குமென்பார்- சித்துத்தான்பிரகாசமெனவும் - நிதித்தியாசவப்பியாசத்தாற்கனவுகானற் சலம்போலப் பிரபஞ்சம்பொய்யாய்ப் போய்நன்மைதீமை சுட்டுதலற்றதால் மனுடானந்த முதலிரணியகருப்பானந்த வரையதினெருவகையானந்தத்துக்கு மேலாகியபிரமானந்தம் விளங்குமென்பார் ஏயதொருவானந்தம் பிரகாசமெனவும் சகசவப்பியாசத்தாற்கானலானது சூரியன்மாத்திரமாய்லட்சியமற்றதுபோல மூன்றுபரிச்சேதரகிதமாகியவகண்ட சொரூபம் விளங்கு

மென்பார்-பரிபூரணந்தான் பிரகாசமெனவு
ங் கூறினர்

(வி-ம்.) முதலாவதுவாக்கியவப் பியாசத்
தால் சித்துஆனந்தம் - பரிபூரணம்விளங்கா
தோவெனில ஆசிரியர்போதித்த மட்டுக்குஞ்
சிரவணத்தாலாத்மாபரோட்சமாகமாத்திரம்வி
ளங்குகின்றதேதவிர அபரோட்சமாகவிளங்கா
ததால்சித்து ஆனந்தம்பரிபூரணம் விளங்கா
தெனவும்-இரண்டாம்வாக்கியவப்பியாசத்தா
ல்-சத்துஆனந்தம் பரிபூரணம் விளங்காதோ
வெனில்-ஆசிரியர்போதித்தமட்டுக்குமனனத்
தாலாத்மாபிரத்தியட்சமாய் விளங்குகின்றதா
லுண்டெனப்பரோட்சமாகச்சத்துவிளங்கா
தஅபரோட்சமானலுஞ்சத்தியமானஜகவில
ட்சணமாகமாத்திரம் விளங்குகின்றதாலானந்
தமும்பரிபூரணமும் விளங்காதெனவும்- மூ
ன்றுவதுவாக்கியவப்பியாசத்தால்சத்துசித்து
பரிபூரணம் விளங்காதோவெனில் ஆசிரியர்
போதித்த மட்டுக்கும்நிதித்தியாசனததால் ஆ
த்மாவபரோட்சமாய் விலட்சணமானஜகத்து
ப்பொய்யாய்ப்போயானந்தம் விளங்குகின்ற
தால்உண்டெனப்பரோட்சமாய்ச் சத்துஞ்சத்
தியமானஜகவிலட்சணமாகச் சித்தும்விளங்கா
துஆனலும்பிரவஞ்சம்பொய்யாய்மாத்திரம்
விளங்குகின்றதால்சொப்பன விடயம்போய்

யாறுலும்நேத்தியெனப் பேசுகின்றதுபோல் விபரீதமுந்துன்பமுநீக்கினுலும்விட்சேயந்தோற்றலாற் பரிபூரணம் விளங்காதெனவும் நான்காவதுவாக்கியவப்பியாசத்தாற்சத்துசித்துஆனந்தம்விளங்காதோவெனில் - ஆசிரியர் போதித்தபடிசகசாப்பியாசத்தால் ஆத்மாவபரோட்சமாய் விலட்சணமான செகத்துப் பொய்பாய்ப்போனதுஞ் சொப்பனவிடயந்தானுப்ப் போனதுபோலத்தானுப்ப் பரிபூரணம் விளங்குகின்றதால் - உண்மெடனப் பரோட்சமாகச் சத்துஞ்சத்தியமானசகவிலட்சணமாகச்சித்தும் விலட்சணஜகம்பொய்யாக ஆனந்தமும் விளங்காதெனவுமறிக-- எனவென்பதைக்கடைநிலேத்தீபகமாக- நான்கோடுங்கூட்டுக.

(இ-ம்) மோட்சவிருப்ப முடையோருக்குஅப்பியாசக்கிரமங்கூறி அவ்வப்பியாசத்தினுல் சத்தியக்கியானவனந்தானந்த வஸ்துத்தாறுக விளங்குமெனக்கூறியதாம். (௰௧)

(அவதாரிகை)

வாக்கியத்தாலஞ்ஞானநிவர்த்திகூறல்.

(கவி.) மலமாகுமஞ்ஞானநிவர்த்தி சொதுபிடத்துமுதல்வாக்கியத்தாற், கிலமாகுமாவரணமிரண்டாம்வாக்கியத்தால்விட்சேபம்போகு, நலமாகாவவித்தையொடுமாயையும் போ

மூன்றிலப்பாலுநாஞ்சொல்லா, னுலகானநா
மரூபங்கள் போமெனப் பெரியோருரைப்
பர்தாமே.

(இ-ள்) மலமாகும்-களங்கமாகின்ற- அஞ்
ஞானநிவர்த்தி - வாக்கியத்தாலஞ்ஞானநிவர்த்
தியை - சொல்லுமிடத்து, விளம்புமிடத்தில்-
முதல்வாக்கியத்தால்- முதலாவதுவாக்கியவப்
பியாசத்தால்-ஆவரணம்- மறைப்பானது-இ
லமாகும்-நாசமாகுமெனவும்-இரண்டாம்
வாக்கியத்தால்-இரண்டாவதுவாக்கியவப்பியா
சத்திநால்-விட்சேபம்-பேதத்தோற்றமானது
போகும்-நீங்குமெனவும்-மூன்றில்- மூன்றா
வதுவாக்கியவப்பியாசத்திநால் - நலமாகாவவி
த்தையொடு-நன்கல்லாதவறியாமையுடன்-மா
யையும்-அவித்தையும் போம்- ஒழியுமெனவு
ம்-அப்பால்-அதன்பின்பு - நாலாஞ்சொல்லா
ல்-நான்காம்வாக்கியவப்பியாசத்திநால் - உல
கான-பிரபஞ்சமாகிய-நாமரூபங்கள்- பெய
ருருவமானதிரிசியங்கள்போம்-அகலுமெனவு
ம்-பெரியோர்-மகான்கள்-உரைப்பர்-கூறுவா
ர்கள் எ-று.

(ப-ம்.) ஆத்மசொரூபத்தைமறைத்துத்து
ன்பந்தருவம்தன்பார்மலமாகுமெனவும் - இ
ரைநீங்கிலந்தமறைவிலிருந்தவர்களுடையப
குப்புத் தெரிதல்போல-இருபத்தொன் பது

தத்துவங்களின் பேதந்தெரியாதமறைப்பு நீங்கி- யதனதன்றன்மைகள்தெரிய வருமென்பார்-இலமாகுமாவரணமெனவும்- ஒடத்திலிருப் பவனுக்குக் கரையினிற்கின்ற விருட்சமோடுவதாய்மாறுபாடாய்த்.தோற்றல் நீங்கல்போலத்தேகந்தானெனத் தோற்றினும் பரிபூரணமாகிய சொரூபமே நானென்கின்ற மனத்தாற் றேகம்தானென்கின்ற புத்திபோமென்பார்-விட்சேபம்போகுமெனவும்- தேகத்தைச்சத்தியமாகப்பண்ணி எழுவகைப்பிறவித்துன்பங்கொடுக்குமென்பார் - நலமாகாவெனவும் -தேகாதிப் பிரவஞ்சஞ் சத்தியம்போலத்தோற்றுவிப்பது நீங்கிக்கானற்சலம்போலப் பொய்யாய்ப் போமென்பார்- அவித்தையொடுமாயையும்போமெனவும்- மூலாஞ்ஞானங்கெடுமென்பார்-உலகான தாமரூபங்கள் போமெனவுங்கூறினார்———

(வி-ம்.) முதலாவதுவாக்கியவப் பியாசத்தால்விட்சேபநீக்கம்-அவித்தைமாயைநீக்கம்மூலப்பிரகிருதிநீக்கமுண்டாகாதோவெனில்-
ஆசிரியர் போதித்தமட்டுக்குஞ்சிரவணவப்பியாசத்தால் இருபத் தொன்பதுதத்துவங்களில் அதனதன்றன்மையைமாத்திரம்

தெரிகின்றதேதவிரத்தான் பூரணவா
த்மாவென்பதுந் தேகாதிசெகத்துப் பொய்
யென்பது மெல்லாந் தானென்பதுந் தெரி
யாதாகையால் திரையைநீக்கவே அதை நீக்கு
மூன் அதற்கப்பா லிருப்பவராரோ வென்றி
ருந்தமயக்கமட்டுநீங்குமே தவிரஉற்றுப்பார்
த்தபின் அவரின்னாரென்று தெரியவருகின்ற
தும் யோசித்ததின்பேரிற் பகையாளியல்ல
வென்று தெரியவருகின்றதும் சொந்தமென்
றறிந்ததின் பேரிலவர்களின் நினைப் பற்றுப்
போகின்றது அத்திரை நீக்கமாத்திரத்திலுண்
டாகாததுபோல ஆவரண நீங்குமேதவிரமன
னவப்பியாசத்தாலுண்டாகின்ற அவித்தைமா
யை நீக்கமும்சகசவப்பியாசத்தாலுண்டாகின்
ற மூலப்பிரகிருதிநீக்கமும் உண்டாகாதெனவும் - இரண்டாவதுவாக்கிய வப்பியாசத்தால்
அவித்தைமாயைநீக்கம் மூலப்பிரகிருதிநீக்க
முண்டாகாதோ வெனில் ஆசிரியர்போதித்த
மட்டுக்கும் மனனவப்பியாசத்தால் பூரணவா
த்மாவாகியதனக்குத்தேகாதிஜகத்துவிலட்சண
மென்றுமாத்திரந்தெரிகின்றதேதவிர அவை
பொய்யென்பதும் எல்லாந்தானென் பதும்
தெரியாதாகையால்முற் கூறிய திட்டாந்தம்
போல விட்சேப நீங்குமேதவிர நிதித்தியாச
சாட்சாத்காரவப்பியாசத்தாற்சித்திக்கின்ற அ

வித்தைமாயை நீக்கம்- மூலப்பிரகிருதி நீக்க முண்டாகாதெனவும் - மூன்றுவதுவாக்கியவ ப்பியாசத்தால் மூலப்பிரகிருதிநீக்க முண்டா காதோவெனில் ஆசிரியர் போதித்தமட்டுக்கு ம் நிதித்தியாசவப்பியாசத்தாற் சத்தியமாய்ப் பரிபூரணமான தன்னிடத்திற் கற்பிதமான தேகாதி ஜகத்துமித்தையென்றுமாத்திரந்தெ ரிகின்றதேதவிர அவை யெல்லாந்தானெனத் தெரியாதாகையால் முற்கூறிய திட்டாந்தம் போலஅவித்தைமாயை நீங்குமேதவிர சாட் சாத்காரவப்பியாசத்தாற் சித்திக்கின்ற மூலப் பிரகிருதி நீக்கமுண்டாகாதெனவும்- முந்தின வாக்கியவப்பியாசத்தினுலேயே சித்திக்கத்தக் கதைப் பிந்தினவாக்கியவப் பியாசத்தினுலே சித்திக்காதா வெனக்கேட்க வேண்டுவதில்லை யெனவறிக-தாம்-ஏ-அசைகள்.

(இ-ம்) இந்நான்குவாக்கிய விசாரணையினு லேமூலப்பிரகிருதியும் அதன்காரியமான ஆவ ரணுதிநான்குநீங்குங்கிரமத்தைக் கூறியதாம்.

(அவதாரிகை.)

வாக்கியவப்பியாசத்துக்கவதிகூறல்.

(கவி.) அவதிமுதல்வாக்கியத்துக் கவத்தை யொரு மூன்றுமறிந்தப்பாணிற்றல் - புவன வாதனைவரினு மிரண்டாற்போக்கிக் கூத்தர்

போற்றுனுதல், கவலையின்றிமூன்றும் வாக்கி
யத்தாலானந்தமேலாங்களைகண்டோங்கல், தவ
நெறியானான்கிலெல்லாம் பிரமமென்றேயுற்
றிருக்குந்தன்மைத்தாமே.

(இ-ள்.) முதல்வாக்கியத்துக்கு - முந்தின
வாக்கியவப்பியாசத்திற்கு - அவத்தையொரு
மூன்றும் - சாக்கிராதியவஸ்தாத்திரயத்தையு
ம்-அறிந்து-தெரிந்து-அப்டாணிற்றல்- வேறு
யிருக்கின்றது-அவதி-அவதியாய் - இரண்டா
ல்-இரண்டாம்வாக்கியவப்பியாசத்திற்கு- புவ
னவாதனைவரினும் - பிரபஞ்சவாசனையுண்டா
னபோதிலும்-போக்கி- நீக்கி- கூத்தர்போல-
வேஷிதாரியைப்போல-தானுதல்- ஜகத்துக்கு
வேறாகியசர்வ சாட்சிதானுகின்றது அவதியா
ம்- மூன்றுமவாக்கியத்தால்- மூன்றும் வாக்கி
யவப்பியா சத்திற்கு-கவலையின்றி- துக்கமின்
றி-ஆனந்தமெலாம்- மனுடானந்தமுதலியவி
டயானந்த பனைத்தையும்-களைகண்டு- அளவி
ட்டு-ஓங்கல்-மேலாகிய வானந்தமாயிருக்கின்
றதவதியாம்நான்கில்-நாலாம்வாக்கியவப்பியா
சத்திற்கு-தவநெறியால்- சத்துவதவமாகியசி
ரவணுதிமார்க்கப்படி-எல்லாம்- மித்தையான
தேசாதிஜகத்தனைத்தும்-பிரமமென்றேபிரம
சொரூபமென்பதாகவே- உற்றிருக்கும் - அ

மைந்திருக்கின்ற- தன்மைத்து - இயல்பையு டையது- ஆம்-அவதியாம்-எ—று.

(ப-ம்) முதலாவதுவாக்கிய வப்பியாசத்து க்கு-அறிவையாதென விசாரிக்கத்தொடங்கிச் சரீரத்திரயத்துளதனதன் றன்மைகளைப்பகு த்தறிதல்-எது- அவைகளுற்பத்திநாசமுள்ள தாயுந்தானு யறிதலின்றியொன்றைப் பற்றிய திலதாயு மிருப்பதாலவைகளுக் கறிவுவேறெ னவறிதல்-சொரூபம் உற்பத்திநாசமுள்ளதா யுந்தானுப் விளங்குதலின்றிச் சூரியனைப்பற் றிவிளங்குகின்றதாயு முள்ளகடத்துக்குச் சூரி யன்வேறும்போலச் சரீரத்திரயத்துக்கும் அறி வுவேறுதானென்று இவ்விதயுத்திகளோடு நிச் சயஞ்செய்தல்-காரியம்- இங்ஙனஞ்சரீரத்திர யத்துக்குமறிவுவேறென நிச்சயஞ்செய்து அ திற்சமுசயம்வாராமல்நிலைத்திருக்கின்றது அ வதியென்பார்-அவதிமுதல் வாக்கியத்துக்கவ த்தையொருமூன்றுமறிந்தப்பானிற்ற லெண வும்- இரண்டாவதுவாக்கியவப்பியாசத்திற்கு த்திரிசியத்தைவிட- திருக்குவேறென்னுமாரு த நிச்சயம்மே- எது-அந்தத்திருக்கேநானென் னுமறிதல்-சொரூபம்- கடத்தின்மேற்றமாதி யைக்கண்கண்டு கடத்திலுற்கண்காணப்படா திருத்தல்போலத்திரிசியததினன்னுவயவெதி ரேகங்களையறிந்து அவைகளாலநாமறியப்பு

டாதிருக்கின்றதால்நாம் அகண்டமான திருக்குத்தா னென்று இவ்விதமானயுத்திகளோடுநிச்சயித்தல்-காரியம் தானறிபவன்செய்பவன் புசிப்பவனே ரிடத்திலிருப்பவ னொருவர்கூடவிருப்பவனாகத்தோற்றினாலும்பெண்வேடம் போட்டவனுக்குவேடம் வேறெனவுந்தான்புருடனெனவும்நிச்சய மிருத்தல்போல்நாமறிபவன்செய்பவன்புசிப்பவன் ஓரிடத்திலிருப்பவன் ஒருவர்கூடவிருப்பவனலநமக்குத்தேகாதி செகத்துவேறுநாம்சர்வசாட் சிதானென்று சகசமாயிருக்கின்றது அவத்யென்பார்-புவனவாதனை வரினுமிரண்டாற் போக்கிக்கூத்தர்போற்றாறுத லெனவும- மூன்றுவதாவாக்கிய வப்பியாசத்திற்குத் திரிசியமான தேகாதி ஜகத்து விலட்சணமாகிய அகண்டமானதிருக்கு நாமென் னுமாரூத நிச்சயமே-எது-சரீரத்திரயமுமித்தையதற்குவிலட்சணமாகியசாட்சியாகின்றநாமேசத்தியம்- நாமே மற்றெல்லாச்சரீரத்திரயத்துக்கும் விலட்சணமாகிய சர்வசாட்சி அத்தேக மெல்லாமித்தையெனவறிதல்-சொரூபம்- மென்னுதுமெய்-பூடனைதிபொய்போலச் சர்வ சாட்சியாகிய நம்மிடத்திற் றோன்றிய தேசாதிப் பிரபஞ்சமித்தை நாமேசத்தியமென் றிவ்விதயுத்திகளோடு நிச்சயித்தல்-காரியம்-ஜகத்துமித்தை

யாலகையால் மூவகைக்கிருத்தியங்கள்- செய்ய வேண்டுமென்னுந் துன்பமின்றிப்பதி ஞெருவகையானந்தம் புசிப்பவனும் நாமொருவனேயென்றறிந்து பிரமானந்தமயனுயிருக்கின்றது அவதியென்பார் - கவலையின்றிமூன்ரும் வாக்கியத்தாலானந்தமெலாங் கனாகண்டோங்கலெனவும்-நாலாவதுவாக்கியவப்பியாசத்துக்குப் பிரமமேதானுயிருத்தல் - ஏது-மித்தையான சகத்துந்தானே யென்றறிதல்-சொரூபம்-பொய்யானபூடணுதிபொன்னுதியேயாவதுபோல மித்தையானசகத்துந் தானேயென்று இவ்விதயுத்திகளோடு நிச்சயித்தல் காரியம்-சர்வமும்பிரமமயமாய்ப்போனதாற் சுட்டற்றுநிற்கின்றது அவதியென்பார்-தவநெறியானுங்கிலெல்லாம் பிரமமென்றேயுற்றிருக்குந்தன்மைத்தாமெனவுங்கூறினர்.

(வி-ம்) மூவகைக்கிருத்தியங்களாவன தாரித்திரியநோய்சத்துருவின் துன்பநீக்குகின்றதற்கேதுவானஉழவு தொழுவுவரைவு வாணிபம் வித்தைசிற்பமாகிய இகலோககிருத்தியமும்-நரகதுன்பநீக்குகின்றதற்கேதுவான யாகதானதர்ம தவவிரதமந்திர செபமுதலாகியபரலோககிருத்தியமும்- ஜனனமரண துன்பநீக்குகின்றதற்கேதுவான சிரவணமனனநியான சமாதியாகியமோட்ச கிருத்தியமுமென்றறிக

-அவதியென்பதை அடிநிலைத்திபகமாகநான்
கிடத்துங்கூட்டுக-

(இ-ம்)சிற்சடம் வேருய்வாசனுட்சயமாய்
மனோலயமாய்சாட்சாத்கார முண்டாகுமென்
பதாம் (௫௩)

வேறு.

(அ-கை)வாக்கிய நிர்ணயங்கூறல்

(கவி)வாக்கியத்தினிர்ணயங்கள்வகுக்கின்
மூதற்றாமாம் வாக்கியநாலாம் வாக்கியவல்ல
மையேதென்றற்- றாக்குமொழிபத்துவிதமா
தலினாலிரண்டாந்தரமூன்றும்வாக்கியமாந் த
த்வமசியெனலா -லாக்கியமூன்றுந்தரமாமிர
ண்டாம் வாக்கியந்தானகமென்ற சீடனுணா
க்கப் படிகாட்டுதலா - னேக்கியறியா வறிவே
பிரம மென்றவதனுனுண்ணியநாலாந் தரமா
நுவலுமுதன் மொழியே.

(இ-ள்) வாக்கியத்தின் - வாக்கியங்களினு
டைய-நிர்ணயங்கள்- தரத்தின துநிச்சயங்க
ளை -வகுக்கின்-கூறுமிடத்தில்-வாக்கியநாலாம்.
நான்காம்வாக்கியமானது - மூதற்றாமாம்-மூ
தலாவதுவகையாகும் - வாக்கியவல்லமையே
தென்றால்- அவ்வாக்கியத்துக்கங்கணமாகுந்தி
றமையாதெனில்- தாக்குமொழி- பொருந்தி
ய அவ்வாக்கியமானது - அத்துவிதமாதலினா
ல்- அனைத்துமொன்றெனவனு பவங்கொடுக்கி

ன்றதாகையாலதுவே அத்திறமையாம்- மூன்றும்வாக்கியம்- மூன்றாவதுவாக்கியமானது- தத்வமசியெனலால்- பிரமநீயென்றுஆசிரியருபதேசித்துப் பிரமமாக்கின்றதினுல் - இரண்டாந்தரம்- இரண்டாவதுவகையாகும்- இரண்டாம்வாக்கியம்- இரண்டாம்வாக்கியமானது- அகமென்றேசீடனுணாக்க- நான்பிரமமென்று சீடனனுபவஞ் சொல்லும்படி- அப்படிகாட்டுதலால் - அவ்விதமே லட்சணமாய்த் தெரிவித்தலால்- ஆக்கிய மூன்றுந்தரமாம்- வேறுக்குகின்ற மூன்றாவதுவகையாகும்- நுவலுமுதன்மொழி- சொல்லப்படுகின்ற முதல்வாக்கியமானது- நோக்கியறியாவறிவே- பரோட்சமாயறிந்த பிரக்ஞானமே- பிரமமென்றவதனுல்- பிரமசொரூப மென்கின்றதினுல் . நுண்ணிய-கடையான- நாலாந்தரமாம்- நான்காவதுவகையாகும்- எ- று.

(ப-ம்)பொய்யாய்த்தோன்றும் அலையாதி கடலேயாகின்றதுபோல மித்தையாய்த்தோன்றும் பிரகிருதிமுதலிய ஜகசீவபரங்களனைத்துஞ் சத்தியஞான வனந்தானந்த சொரூபமானதன்னைவிட வேறல்லவென்று ஒன்றுகின்றவனுபவமென்பார்- அத்துவிதமென்றார்.

(இ-ம்) அப்பியாசிக்கும்பொருட்டுவாக்கியங் களினுயர்வுதாழ்வு தெரியக்கூறியதாம். (௰௪)

(அகை) வாக்கியவுபதேசத்தினால் மோட்ச மடைந்தோர்க ளதுகதைகூறல்.

(கலி கோதில்கதைமுதன்மொழியாற்குச்ச ரியநாட்டிற்கோவதைசெய்சக்கிலியன் குறை கடவிர்ந் தடைந்தா- னீதி யிரண்டாமொழி யாற் கெர்ப்பணியேகுருவாய் நிசிசரன்றன் பவமகற்றி நேர்மையில் வீடடைந்தான்-சோ திசெய் மூன்றுமொழியாலஞ்ஞானச்சுதராத் முன் புறவேடுவச்சிபரசுக மடைந்தாளிவை யே- யோதியநாலாமொழியா லந்தணன்செ ய் வினையாலுதவியிலாப் புசிப்புதவி யுயர்ந் தடையுங்கதையே.

(இள்) கோதில்கதை- குற்றமற்ற வாக்கியக தையைக் கூறுமிடத்து- முதன்மொழியால்- முதலாவது வாக்கியவனுக்கிரகத்தால்- குச்ச ரியநாட்டில்- குச்சலியதேசத்தில்- கோவதை செய்சக்கிலியன்- பசுக்கொலை செய்துவந்த வோர் சக்கிலியனானவன்- குறைகடவிர்ந்து- அக்கோகத்திபாவமுதலிய மோட்சப்பிரதிப ந்தமான குறைபாடுகணீங்கி- அடைந்தான்- விதேகமுத்திபெற்றான் - கெர்ப்பணியே- க ருப்பந்தரித்த ஓர்ஸ்திரீயே- நீதிகுருவாய்-நி யாயமான சற்குருவாயனுக்கிரகித்த- இரண்

டாமொழியால்- இரண்டாம் வாககியத்தால்- திசிசரன்- ஒரிராக்கதன்- தன்பவமகற்றி தன துஜனனமரணத்தைநீக்கி- நேர்மையில் வீட டைந்தான்- ஒப்பற்றமுத்திபெற்றான்- அஞ் ஞானச்சுதரால்- அஞ்ஞானமுதலியபிள்ளைக ளால்- அன்புறுவேடுவச்சி- அயர்மனமான வேடஸ்திரீ- சோதிசெய் மூன்றுமொழியால்- சுயம்பிரகாசமாக்குகின்ற மூன்றும்வாக்கியவ னுக்கிரகம் பெற்றதால்- பரசுகமடைந்தாள்- பேரின்பம்பெற்றாள்- அந்தணன் செய்வினை யால்- ஒரு பிராமணனுனவ சேவற்பணிசெய் து- உதவியிலாப் புசிப்புதவி- கொடுக்கக்கூ டாத போகத்தைக் கொடுத்து- ஓதியநாலா மொழியால்- அனுக்கிரகித்த நாலாம்வாக்கிய த்தால்- உயர்ந்தடையும்- மேலானமுத்திபெ ற்றார்- இவையே- இவைகளே- கதை- வாக்கி யத்தால்மோட்சம்பெற்றோர்சரித்திரங்களாம்

(ப-ம்)தேகாத்மபுத்தியைக் கொடுக்கின்ற மற்றைக்கதைகளுக்குள்ளகுற்றமின்றியகதை களென்பார்-கோதில்கதையென்றார்.

(வி-ம்)குச்சரிய தேசத்திற் கதிபதியாகிய துலுக்கராசன் அரண்மனைச் சமையலுக்காக தினந்தோறும் -ரு- பசுவதைசெய்துவ ந்த வோர்சக்கிலியானவன் அவ்வரசன் ஒரு காலத்தில் வேட்டைக்குப் போனபோது கூ

டப்போகச்சேஓர்நதிக்கரையில் ஓர்மகாத்மா கோகத்திபுராணம்வாசித்து அதிற்பசுக்களை யிம்சைசெய்யக் கூடாதென்றும் பசுவானது பயிரைத்தின்றன் முதலியதீங்கு செய்தாலப் போதும் நெட்டியைத் தோல்சீவி அதைக் கொண்டுதண்டித்து விலக்கவேண்டுமென்று ம் அப்படியன்றி வேறுவிதமாய்த் தண்டித் து வொருரோமமாவது வுதிர்ந்தால், ரவுரவா திநரகப்பிராப்தியுண்டாமென்றுஞ்சொன்ன தைஅந்தச்சக்கிலியன் பூருவசன்மத்துப்புண் ணியபரிபாகத்தாற்கேட்டுத்தினமொன்றுக்கு -ருா-பசுவாக அந்தபசுக்களைக் கொன்றிருப் பதாற்றான்செய்தபாவத்துக்களவில்லையென் றும்எந்தவிதத்தில்தீரப்போகுமென்றும்பய மடைந்துஅந்தமகாத்மாவின்பாதத்தில் வண ங்கித்தனதுபாவகிருத்தியங்களெல்லாந்தெரிவி த்துஅப்பாவநீங்கிநற்கதியடையச்செய்யவே ண்டுமென்று விண்ணப்பஞ் செய்யஅந்தம காத்மாஇவ்வளவு அதிபாதகனைப் பார்க்கவுங் கூடாதென்றுதமதுகிரகத்துக்கெழுந்துபோ ய்ப்பின்வாசல்வழியாசச் சஞ்சரித்துக்கொண் டிருக்க அவரெழுந்துபோம் போதுபின்னு லேகூடச்சென்ற அந்தச்சக்கிலியனனவன்அ வர்கிரகத்துக்குமுன்வாசலில் அவரதருளைநா டிக்கொண்டு அன்னுகாரமில்லாமல் நிற்கஇவ்

விதமோர்மண்டலஞ் சென்றபோது அம்மகா
த்மாவின்பத்தினியார் அச்சக்கிலியன் திற்கின்
றதைநோக்கி- அவனுக்கனுக்கிரகஞ்செய்யும்
படிஅவரிடத்தில் விண்ணப்பஞ் செய்யஅவர்
இவன்அளவற்றமோகத்திக்காரனானதாற்கூடா
தென்றுகூறினதற்கு அவ்வன்னையார்பரமாத்
மாவாகிய தேவரீராயடைந்தும் இவனுக்கப்
பாவம் நீங்காதிருக்கலாமா இன்னுஞ்சிலநாழி
கையில்அவனிறந்து போகின்றதாயிருப்பதா
லும்பசுக்களைக் கொன்றதுந் தின்றதும்பாவ
மும்மற்றெல்லாமுஞ்சுவாமியாயிருப்பதாலு
ம்-அனுக்கிரகிக்கவேண்டுமென்றுவிண்ணப்ப
ஞ்செய்ய-அதின்பேரிற்சம்மதித்துஅந்தமகா
த்மா முதல்வாக்கியத்தையனுக்கிரகம்பண்ண
அதைக்கேட்டுஅந்தச் சக்கிலியனானவன்மோக
கத்திப்பாவமும்நீங்கித்த த்துவஞானமும்பெ
ற்றுவிதேகமுத்தியடைந்தமை்த முதல்வாக்கிய
கதையெனவும்-

ஓரிராக்கதனானவன்வனத்தில்வருகின்ற
ஜனங்களைப்பிடித்துப்புசித்துக்கொண்டிருக்
குங்காலத்தில்ஓர் பிராமண கெர்ப்பஸ்திரீயா
னவள் அந்தவனத்தில்வர அவளைப்பிடித்துக்
கொல்லத்துடங்கினபோது உனக்குபட்டசிதிர
வேண்டியதேபிரதானமாகையால் நீயென்னை
க்கொன்றுபுசித்ததின்பிறகு நானிப்போதுப

தேசிக்கின்ற மந்திரத்தா லென்னையெழுப்பி விட்டுவிடென்றுவோர்மந்திரமுபதேசிக்கஅவ்வரக்கனந்தப்படி அவளைக்கொன்றுதின்று அம்மந்திரத்தாலெழுப்பிஅப்பால்நிதம்இரைக்காகவனத்தில்அலைய வேண்டுவதில்லையென்றுஅவளையேகொன்றுதின்று எழுப்பிவரஅதனாலவள்மிகவுந் துன்புற்றுப் பிரமாவையுபாசிக்க அவர்பிரசன்னமாய் சனனமரண துன்பம்நீங்கும்படியா யிரண்டாம்வாக்கி யத்தையனுக்கிரகிக்கஅதை அவள்கேட்டுப்பிரமக்கியானம்பெற்றதுந்தவிர அவ்வரக்க னுக்கும்உபதேசிக்கஅவனும்அதன்மூலமாய்த்தத்துவஞானம்பெற்று மோட்சமடைந்ததேயிரண்டாம்வாக்கியகதையெனவும்-

ஓர்வேடஸ்திரீக்கு அஞ்ஞானம்ஆவரணம் விட்சேபம்மாயையென்னும்நான்குபிள்ளைகள் பிறந்து அப்பிள்ளைகளான்மிகுந்த துன்பத்தையடைந்துஅதை நீக்கிக்கொள்ளும்பொருட்டுஅப்பிள்ளைகளுடனே மகாத்மாக்களிருக்குமிடந்தேடிப்போயோர் மகாத்மாவைக்கண்டுதன்துன்பத்தைத்தெரிவித்துஅந்தப்பிள்ளைகளையொப்புவிக்கவே அந்தமகாத்மா அவளுக்குமூன்றாம்வாக்கியவனுக் கிரகஞ்செய்ததால் -அவள்தத்துவஞானம்பெற்று மோட்சமடைந்ததே-மூன்றாம்வாக்கியகதையெனவும்.

மூமூட்சுவானவோர்பிராமணர் ஒருமகாத்மாவைக்குருவாயடைந்து உபதேசம்பெற்றுக்கொள்ளும்பொருட்டுப் பணிவிடைசெய்துக்கொண்டிருக்குங் காலத்தில் அந்தமகாத்மா ஒருநாள் தாகத்துக்குச் சலங்கொண்டு வரச்சொல்லஅச்சீடன் போயிருக்கும்போதுஅவர் பரிபூரணநிசையடைகின்றசமைய நேரிட்டதால் - நாலாம்வாக்கியத்தைமணலிலெழுதிவைத்துப்போட்டுப்பரிபூரணமாய் விட்டார் அதைப்பார்த்திருந்தஓர்கூத்தாடிச்சி அவ்வாக்கியத்தைத்தன்காதோலையிலெழுதிப் போட்டுக்கொண்டு இம்மணலி லெழுதியிருந்ததை யழித்துப்போட்டுப்போன பின்பு அந்தச்சிடரானவர் வந்துகுருபரிபூரணமாய் விட்டதையும்மணலி லெழுத்தழிபட்டிருந் ததையுங்கண்டு துக்கித்துப்பக்கத்தில்நின்றவர்களாற்றன் குருவெழுதினவாக்கியத்தைக்கூத்தாடிச்சிகாதோலையி லெழுதிப்போட்டுக் கொண்டுபோனதுதெரிந்து அக்கூத்தாடிச்சியிடத்திற்போய் அவள் அந்தவாக்கியத்தை மனோரம்மியமாய்க்கொடுக்கப் பெற்றுக் கொள்ளும் பொருட்டு அவளிட்டபணிவிடையெல்லாஞ்செய்துக்கொண்டுவரும்போது அவள்காதில் அவ்வாக்கியமிருந்தமகிமையினால் அவள்பேர் பூமியிற்பிர சித்தமாகியொருராஜா விடத்

திற்போய்க்கம்பநாட்டியதி லேறியாடும்போ
து அவளுக்குத் தாகமெடுத்துத் தண்ணீர்கே
ட்க அந்தப்பிராமணரான பணிவிடைக்கார
ர்ஒருசெம்பிற்சலங்கொண்டு போய்உயரநீட்
டஅவ்வாக்கி யமகிமையால் அக்கூத்தாடிச்சி
கையிற்போய்ச்சேர்ந்ததாலும்- அவள்தாகத்
துக்குச்சாப்பிட்டுவுடனேசெம்பைக்கீழேவி
டவும்அந்தப்பிராமண ரதுபணி விடைமகி
மையால்அவர்கையில் வந்துசேர்ந்ததும்அந்
தராசாவானவன்கண்டு அந்தப்பிராமணரைஅ
ழைத்துஅந்தச்செம்பு வுபரம்பானதும்வந்
ததும்யாதினாலெனவினவ அப்போதுஅந்த
ப்பிராமணர்தன்குருவெழுதினவாக்கியம்அவ
ள்காதிலிருக்கின்ற மகிமையினாலும் அவள்ம
னோரம்மியமாயதைக்கொடுக்கும் பொருட்டு
த்தான் செய்துவருகின்ற பணிவிடையினாலு
மென்றுகூற அதைக்கேட்ட அந்தவரசன் அக்
கூத்தாடிச்சியைவரவழைத்து அவளுக்குவே
ண்டியதிரவியத்தைக்கொடுத்து அவள்மனோ
ரம்மியமாய் அந்தக்காதோலையை அப்பிராம
ணருக்குக்கொடுக்கும் படிசெய்ததால் அவர
தைவாங்கி அந்தநாலாம் வாக்கியவப்பியாசத்
தால்தத்துவஞானம்பெற்றுபரமோட்சமடை
ந்ததேநாலாம்வாக்கியகதையெனவுங்கொள்க.

இதல்லாமற் பாடபேதமாய்ச்சிலபிரதிகளில் இரண்டாம் வாக்கியத்திற்குக்கதைசொல்லியிருப்பதில்- கெற்பணிசேய்குருவாயென்பதற்குக்கதை- ஓரிராக்கதனானவன் வனத்திலவருகின்ற சனங்களில் ஞானியா யுள்ளோரையறிந்து அநுக்கிரகம் பெறும்பொருட்டுநீயார் எங்கேயிருக்கிற தென்றுகேட்டு அதற்குச் சொல்லுகின்ற உத்தரத்தால் அஞ்ஞானிகளாய்க்காணப் பட்டபெயர்களை யெல்லாங்கொன்றுதின்றுவருகையில் ஒருதினமோர் கெர்ப்பஸ்திரீ அவ்வனத்தில்வர அவளிடத்திற்போய் நீயார்எங்கேயிருக்கிறதென்று கேட்டபோது அவ ளவனைக்கண்ட பயத்தினால்மயங்கி நிற்க அப்போதுஅவள் வயிற்றிலிருந்த சிசுவானது நான்பிரமசொரூபம் பூரணமாயிருக்கிறேனென்றுகூற அதைக்கேட்டு அவ்வரக்கன் அச்சிசுவையேகுருவாகக்கருதி அந்த கெர்ப்பஸ்திரீயைக்கொண்டுபோய்க் காப்பாற்றி அக்குழந்தை பிறந்தபின்பு இரண்டாம் வாக்கியவநுக்கிரகம் பெற்றுத்தத்துவ ஞானமுற்றுப் பரமோட்சமடைந்த தெனவும்.

நாலாம் வாக்கியத்துக்கு வேறொருவிதமாய்ச்சொலலப் படுகின்றகதை - யொருபிராமணராயிருக்கின்ற பெரியவர்மணலைச்சாதமா

ய்ச்சமைத்துச் செங்கல்லைத் துவை யலாய்ச் செய்துதரத்தக்க- கற்புடையபெண்ணைவிவா கஞ்செய்துக் கொள்ளவேண்டு மெனக்கருதி க்கொஞ்சமணலுமொருசெங்கல்லுமெடுத்து க்கொண்டுதேடிப்போனவிடத்தில் மற்றைச் சாதியிற்கற்புடைய பெண்ணில்லாமல் சூத்தி ரசாதியிலோர் பெண் அம்மணலையுஞ் செங்க ல்லையும் வாங்கித்தன் கற்பினாலேசாதமுந் து வையலுமாய்ச்செய்து கொடுக்கஅதன் பேரி ல்அப்பெண்ணை விவாகஞ்செய்துக் கொள்ள அவள் பணிவிடைசெய்துக் கொண்டிருக்குங் காலத்தில் அவளுக்குநாலாம் வாக்கியத்தை அ னுக்கிரகஞ்செய்ய அதனால் அவள்தத்துவஞா னம்பெற்றுமோட்சமடைந்ததெனவும் கூறு வாருளர்.

இங்ஙனம் வாக்கியகதைவேறு பட் டிருப் பானேனெனில் - சுருதியில் இந்நான்குமகா வாக்கியத்துளொவ்வொரு வாக்கியத்தினால் அ னேகம்பேர் மோட்ச மடைந்திருக்கின்ற அ னேகங்கதைகள் கூறப்பட்டிருப்பதாலும் அ வைகளில்முன்னோர்கள் அவாளவாளுக்குச்சம் மதமானகதையை யெடுத்துவெளிப் படுத்தி யிருப்பதாலும் வேறுபட்டிருக்கின்ற தென வுமறிக.

(இ-ம்) நாலுவாக்கியங்களையும் விசுவாசித்து அனுட்டிக்கும் படியாயதிலதிலடைந்தோர் கதைகளைக்கூறியதாம். (டுரு)

(அ-கை) வாக்கியவப்பியாசஞ் சித்திக்கும் பொருட்டுச்செய்யுந்தியானங்கூறல்.

(கவி.) இந்தவகைப்படியேதியானமுதன் மொழிக்காமெந்தை பரகுருத்தியான மிரண்டாம்வாக்கியத்துச், சுந்தமிலாவறிவது வேதாரூகியிருந்தங்க கண்டமெலாம் பிறித் தறிதலனுபூதியதனாற், றந்தொமசியெனு மொழிக்கேதக்கதியானந்தான் றன்னறிவிற் கண்டமுந்தரன கண்டமுமாயிருத்தல் , சுந்த மறநாலாம்வாக்கியத்தியான மகண்டாகாரமா யிருத்துவிவைகைவல்யத்தியானம்.

(இ-ள்) இந்தவகைப்படியேதியானம்- இவ்வண்ணமே மோட்சமடைவதற் கப்பியாசிகள் செய்யவேண்டியதியானத்தைக் கூறுமிடத்தில்-முதன்மொழிக்கு- முதல்வாக்கியவப்பியாசஞ் சித்திக்கின்ற தற்கு-எந்தை- எமதுபிதாவாகிய- பரகுருத்தி யானமாம் - மேலான ஞானதேசிகருடைய திருமேனியைத்தியானித்தலாகும்- இரண்டாம்வாக்கியத்துக்கு - இரண்டாம் வாக்கியவப்பியாசஞ் சித்திக்கின்றதற்கு-அந்தமிலாவறிவு- நாசரகிதமானகூடஸ்து

ர்-தானாகி-தனதுசொரூபமாகிய-அதுவே-அக்கூடத்தராகிய தானே-அகண்டம்-வியாபகமானசர்வசாட்சியாக-இருந்து-அமர்ந்து-அங்கதனால்-அவ்வுணர்வினால்-எலாம்பிரித்தறிதல்-தேகாதிப்பிரபஞ்சமனைத்தையும் வேறுபடுத்தியுணர்தல்-அனுபூதி-தியானமாகும்-தந்தொமசியெனுமொழிக்கு - அதுநீயானாயென்னும் மூன்றாவதுவாக்கியவப்பியாசஞ் சித்திக்கின்றதற்கு-தானகண்டமும்-தான் பூரணமானமெய்யாயும்- தன்னறிவிற் கண்டமுமாயிருத்தல்-அறிவுசொரூபமாகின்ற தன்னிடத்திலுண்டான பிரபஞ்சமனைத்தும்பரிச்சின்னமான பொய்யாயுமறிந்திருக்கின்ற- தக்கதியானம்-தகுந்ததியானமாகும்-கந்தமற-பிரபஞ்சம் பொய்யென்கிற வாசனையின்றி-அகண்டாகாரமாய்-பூரணசொரூபமாகவே- இருத்தல்-இருக்கின்றது- நாலாம்வாக்கியத்தியானம்-நான்காவது வாக்கியவப்பியாசஞ் சித்திக்கின்றதற்குத்தியானமாகும்-இவை- இந்நாலாம்வாக்கியத்தியானமே-கைவல்யத்தியானம் - சாட்சாத்காரமோட்சங் கொடுக்கின்றதியானமாகும்-எ—று.

(ப.ம்)மிடன் அற்பபுத்தியுடையவனாகையாலுமறிவுஅபரோட்சமாகாமையாலுஞ்சுருதியில்நீராலாங்கட்டியாயத் தடித்ததுபோலஅ

பிவேகுருமூர்த்தமாகுமென்றுதெரிவித்தலா
லுங்குரு திருமேனியைத் தியானிக்கவேண்டு
மென்பார்-எந்தைபரகுருத்தியானமென்றார்-
(இ-ம்) இன்ன வாக்கிய சித்திக்கின்னவிதந்
தியானித்தலெனக்கூறியதாம்- (௰௬)

(அ-கை) முதல்வாக்கியவுரைகூறல்.

(கவி ஞானமே பிரமமென்ற முதன்மொ
ழியின்பயன் கேளுச்செவிகண் மெய்மூக்கு
நயந்தபொறியதனூலான சுவையோசையொ
ளிபரிசம்வாசனையா லறிவதுவே ஞானமதின்
பிரகாசமுரைக்கில் - வானிரவிதிங்களங்கிபிரகா
சமதிலுமலர்விழிகள் பிரகாசமனமதிற்பிரகா
சந்-தானமுறு சீவனதிற் பிரகாசமதிலுந்தன்
னறிவேபிரகாசத்தானமெனவறியே.

(இ-ள்) ஞானமே பிரமமென்ற- பிரக்ஞா
னமேபிரமசொரூபமென்று முதல்வேதத்தி
ற்கூறிய-முதன்மொழியின்- முதலாவதுவாக்
கியத்தின்-பயன்-அருத்தத்தை-கேள்-இயாங்
கூறுதுநீகேட்பாய்-நயந்த- விடயத்தைவிரு
ம்புகிற-நா-சிங்குவை-செவி-சுரோத்திரம்-க
ண்-சட்சு-மெய்-துவக்கு-மூக்கு- ஆக்கிராண
ம்-பொறியதனுல்- ஆகியபஞ்சேந்திரியங்களி
ன்வழியாக-ஆன-இடையிற்கற்பிதமாயுண்டா
ன-சுவை-இரசம்- ஓசை-சந்தம்- ஒளி-ரூபம்-
பரிசம்-பரிசம்-வாசனையால், கந்தமாகியபஞ்

சவிஷயங்களை- அறிவதுவே- அறிகின்றவறி வெதுவோ அதுவே- ஞானம்- ஞானமென்னு ம்பதத்தினருத்தமாம்-(அதின்பிரகாச வியல் புயாதெனில்)-அதின்பிரகாசம்- அவ்வறிவின் விளக்கத்தை-உரைக்கில்- சொல்லுமிடத்தில்- வானிரவி-ஆகாயத்திற்சஞ்சரிக்குஞ்சூரியனு ம்-திங்கள்-சந்திரனும்-அங்கி- அக்கினியும்-பி ரகாசம்-உலகத்திற்பிரகாசமென்று சொல்லப் படுவதாம். அதிலும்- அவைகளினும்- மலர்வி ழிகள்-விகசிதமானநேத்திரங்கள்- பிரகாசம்- அதிகவொளியுடையதாகும்- அதில்- அவைக ளினும்-மனம்-அந்தக்கரணமானது- பிரகாச ம்-அதிகதேஜசுடையதாகும்- அதில்-அதனினு ம்-தானமூன்று-ஓரிடத்திற்பற்றிவிளங்குகின்ற- சீவன்-சிதாபாசன்- பிரகாசம்- அதிகஜோதியு டையதாகும்-அதிலும்-அச்சீவனிலும்-தன்ன றிவே-சுயஞ்சைதன்னியமானசாட்சியே-பிர காசத்தானமென-எல்லாவற்றினுமதிகமானஅ திட்டானப்பிரகாசமென்பதாக- அறி-தெரிந் துக்கொள்வாய்-எ-று-

(ப-ம்) சூட்சுமபூததாமதகுணத்திலுண்டா னஅலபூதபவுதிகங்களுக்குள் சூரியாதிகள்அ க்கினியம்ஸம்மிகுந்துடையதென்பார்-வானி ரவிதிங்களங்கி பிரகாசமெனவும்- அக்குணத் துக்குமேலான சத்துவகுண வியட்டியிலுண்

டானதாயுஞ் சூரியாதிகளைவிளக்கி யறிவதாயு மிருக்கின்றசட்சிந்திரிய மதிலுமதிகப்பிரகாசமுடையதென்பார்- அதிலுமலர்விழிகள்பிரகாசமெனவும்-அச்சத்துவகுண சமட்டியிலுண்டானதாயுஞ்சட்சிந்திரியாதிகளை விளக்கியறிவதாயும் அவைதொழிற்படுவதற் கேதுவாயுமிருக்கின்றஅந்தக்கரணமதிலு மதிகப்பிரகாசமுடையதென்பார்-மனமதிற்பிரகாசமெனவும்-சூட்சுமபூதத்திற்குக்காரணமான மூலப்பிரகிருதியின்தாமத குணத்துக்குமேலானஇராசதகுணத்தி லுண்டானதாயு மந்தக்கரணமுதலானவைகளைவிளக்கி யறிவதாயுமவைதொழிற்படுவதற்கேதுவாயுஞ் சாக்கிரத்திற்புருவமத்தியிலும்சொப்பனத்திற்கண்டஸ்தானத்திலும்-சுழுத்தியிலிருதயஸ் தானத்திலும்துரியத்தில்நாபியிலும் விளங்கப்பட்டதாயு மிருக்குஞ்சிதாபாசன்அதிலும்அதிகப்பிரகாசமுடையவனென்பார்- தானமுறு சீவனதிற்பிரகாசமெனவும்-உற்பத்தியில்லாததாயு மாரோபப்பிரகாசங்களுக்குஅதிட்டானமாயும்சீவன்முதலியவைதவிளக்கியறிவதாயு மவைகள்தொழிற்படுவதற்கேதுவாயுமிருக்குஞ் சுயஞ்சைதன்யமானசாட்சியேஎல்லாத்திலுமதிகப்பிரகாசமுடையதென்பார்- தன்னறிவேபிரகாசத்தானமெனவுங்கூறினர் (௫)

(வி-ம்)சீடனெதிரேயிருந்து கேட்டுக்கொண்டிருக்கவும் ஆசிரியர்கேளென்றது விசேடமானகாரியஞ் சொல்லப்போவதால்வேறுசிந்தையற்றுச்சித்தமே காக்கிரப்படும்படி அபிமுகப்படுத்திக்கொண்டதெனவறிக.

(இ-ம்)ஞானமென்னுமுதற்பதத்துக்குரைகூறிச்சூரியாதியட்டப் பிரகாசமுஞ் சுயவறிவான ஆத்மப் பிரகாசத்தின் பிரதிபிம்பமெனத் தெரிவித்ததாம்.

(அ-கை) அவ்வறிவையானறிந்து கொள்வதெங்ஙனமெனில்.

(கவி.) அவ்வறிவையறிவிக்கும்வகையுரைக்
கி லுடலேயறிவாகுமெனிற்பொறிகளைந்துமி
லாதறியாக்,கவ்வியவிந்திரியந்தானறிவென்றா
லந்தக்கரணமிலாதறியாதுகரணமறிவென்றா
லெவ்விடயந்தானறிந்துந்தனை யறியாததனை
யெழிற் சிவனூட்டிவிக்குஞ் சிவனறிவென்றா
ல், வவ்வியதானல்லாதவெல்லாந்தா னென்றே
மயங்குமதைப்பகுத்தறியவந்தவறிவறிவே.

(இ-ள்) அவ்வறிவை - அந்தவதிட்டானஞானசொரூபத்தை-அறிவிக்கும்வகை- தெரிவிக்கின்றவிதத்தை-உரைக்கில்-விளம்புமிடத்தில் உடலே - தேகமே-அறிவாகுமெனில் - ஞானசொரூபமாகுமென்றால்- பொறிகளைந்துமிலாது- பஞ்சேந்திரியங்களின்றி-அறியா-தே

கமொன்றையு மறியமாட்டாது- கவ்விய- விடயங்களைப்பற்றுநின்ற- இந்திரியம் - பொறிகள்-அறிவென்றால்- உணர்வாகுமென்னில்- அந்தக்கரணமிலாது-அந்தக்கரணமின்றி-அறியாது-இந்திரியங்க ளொன்றையுமறியமாட்டாது - கரணம்- அந்தக்கரணமானது- அறிவென்றால்- சைதன்னியமாகுமென்னில- எவ்விடயம்- சத்தாதிகளெந்தவிடயத்தையும்-தானறிந்தும்-அந்தக்கரணமான துணர்ந்தும்-தனையறியாது- தன்னைத்தெரிந்துக்கொள்ளமாட்டாது-அதனை- அவ்வந்தக்கரணத்தை-எழிற்சீவன்-அழகுபொருந்திய சிதாபாசனுனவன்-ஆட்டிவிக்கும்-அசைப்பிப்பன் - சீவன்-அச்சிதாபாசனுனவன்-அறிவென்றால்-சித்தாகுமென்னில்-வவ்விய-கவருகின்ற-தானல்லாத அச்சிதாபாசனுயிராத-எல்லாம்-அந்தக்கரணுதியனைத்தையும்- தானென்றே- நானென்கிறதாக-மயங்கும்- மோகிப்பன் - பின்னை அறிவுதானியாதெனில்- அதை- அச்சிதாபாசனை-பகுத்தறியவந்த - பிரித்துணருகின்ற- அறிவு-போதமே-அறிவு-அதிட்டானஞானசொரூபமாம்.

(ப-ம்.) தேகாத்மாவாகிய அறிவென்றுகூறுதியிருப்பதாலுந்தன்னைச் சூழ்ந்த பதார்த்

தங்களையறிதல் வனிதாதிபோகங்கள் தனக்கு வேணுமென்று சம்பாதித்து அநுபவித்தல்- சூரிய னில்லாவிடிலுலோக விவகார நடவா மைபோற் சரீரமில்லாவிட்டா லிவைகட்குப் பிரயோசன மில்லாதிருத்தல் முதலிய யுத்தி யிருக்கையாலும் - சகலருஞ்சரீரம் பொசிக்கி ன்றதையேநான்பொசிக்கின்றே னென்றும்- நான்பிராமணனிவன்னம் பிரமச்சாரியாதியா ச்சிரமம்பிறத்தன்முதலியவை யுடையவனெ ன்றுஞ் சரீரமே அறிவாய்ப்பேச மனுபவமி ருக்கையினாலும் சரீரமேயறிவாகுமென்னில் தேகமறிவல்ல வென்று அனந்தஞ்சுருதி யிரு ப்பதாலுஞ் சூரியனஸ்த மானமானாலுலோ கவிவகாரம் நடவாமைபோல - மரணமூர்ச் சையால் ஞானேந் திரியங்களில்லாதபோது தேகமிருந்துந் தன்னைச் சூழ்ந்த பதார்த்தங் களை யறியாதிருத்தல் வனிதாதிகளை யறிந்து அநுபவிக்காதிருத்தல் அவைகள் பிரயோச னமில்லாதிருத்தல் முதலியயுத்தியிருப்பது மல்லாமல் மூங்கிலினாலே கட்டியயானை முத லியதைப் போலவிருத்தல்யோகிகள் கூடுவி ட்டுக்கூடுபாய்தல்- சொப்பனத்திலிவ்வுடலன் றித்தொழில்நடத்தல் மரணத்தின்பின் ஊஷ் ணந் தெரியாதிருத்தல் நிழல்போலச் சுதந் தரமின்றி பிராணனாலேயாட்டி யடக்கப்பட

ல்இதுதேக மென்றறியப்படலா லன்னியமா யஞ் சூட்சுமபூததாமதகுண பரிணாமமான பஞ்ச பூதத்திலுண்டான தாகையா லுற்பத்தியுள்ளதாயும் பிறத்தற்கு முன்னு மிறந்ததற்குப் பின்னுஞ்சுழுத்தி சொப்பன மூர்ச்சை அஷ்ணிம பூதாவத்தைதயோகஞ் சமாதிகாலத்திலுந்தேகநினைப்பு வருகிறதற்கு முன்னும் பின்னு மில்லாததுந்தவிர அந்நினைவுகாலத்திலும் பஞ்சபூதமா யபவாதிக்கில அத்தேகமில்லாததால அசத்தாயும் சுழுத்தி நீங்கன்முதலிய காலத்திற் சரீரத்திற் பொருந்தும்-தன்மை நினைகூடவறியாமையாற் சடமாயுங்கருப்பாசயப்பையுறுத்தன் முதலியதற்கேதுவாகை யாற்றுக்கமாயுங் கருமுதற்றேகாந்தம் வரைநூறு வருடத்துட்கணந்தோறு மழிவதாயிருப்பதால்அனித்தியமாயும் - தாலுமுழமட்டாயா காயத்தைக்குறித்தேயிவ்வளவென்று சொல்லக்கூடாத அற்பமா யிருப்பதாற்கண்டமாயும்-நவத்துவாரத்திலுமல மொழுகல் முதலியதால் அசுத்தமாயும் - பிறத்தல்முதலியசட்பாவவிகாரமிருக்கையால்- விகாரமுள்ளதாயும்- வாலிபமாதியவஸ்தை முதலிய துஞ்சடம் போலத்தெரிதலாற்றிரிசியமாயு மிருக்கின்றயுத்தி யிருப்பதாலும்-என்சரீரம் பொசிக்கின்றதென்றும் என்சரீரமின்னவன்னமாதிபிறத்

தல்முதலிய தனடந்ததென்றும் பேசுகின்ற வனுபவமிருப்பதாலுந் தூலதேசரூமிதன் தியிற் பிராணாதி வாயுகளன் மேந்திரியங்களை யறிவென்றசுருதியிருப்பதாலும் பிராணனீங்கினவுடன்றேகம் பிணமாதல் - சகலவிந்திரியமுமடங்கின சுழுத்தியிலும் பிராணனிருத்தல்காற்றுள்ளபோதுகப்பலோடுந்தொழில்நடத்தல்போல் பிராணனுள்ளபோது சரீரவிவகாரநடக்குதல் முதலியயுத்தியிருப்பதாலும்நான்பிலவான்பசியுடையவன்டேனென்னென்பது முதலிய வனுபவமிருப்ப தாலும் பிராணாதிகளையறிவென்னிற் பிராணாதிவாயுகளன்மேந்திரியங்களறிவல்லவென் றனைத்துஞ் சுருதியிருப்பதாலுஞ் சமாதியோக மூர்ச்சைகாலத்திற் பிராணனில்லாதிருந்துந் தேகப்பிணமாகாதிருத்தல்கப்பலிற் பாய்கட்டுமாளில்லாதபோது காற்றிருந்துங் கப்பலோடுந் தொழினடவாததுபோல மனமில்லாத சுழுத்தியிற் பிராணனுடற் காவலாயிருந்து மதனாற் சரீரவிவகாரமொன்று நடவாதிருத்தல் அதுபிணம்போல மூட்டைகடித்தலாதியையறியாதிருத்தல் முதலியயுத்தியிருப்பதுமல்லாமல் ரதத்தையிழுக்குங் குதிரைசெல்லுமிடத்தை யறியாததுபோலப் பிராணன்வசனாதிதொழில் நடத்தலையறியாதிருத்தல் மனதிருலாட்டி யட

க்கப்பட இதுபிராணனென அறியப்படலா லன்னியமாயுஞ் சூட்சும பூதராசத குணத்தி ன் சமஷ்டிவியஷ்டி யிலுண்டான தாலதையா லுற்பத்தியுள்ளதாயும் முன்பின்னில் லாமன் மத்தியிலுமதன்காரணமாக வபவாதிக்கில் அ ப்பிராணனில்லாததால் அசத்தாயுஞ் சுழுத் திசொப்பனமுதலியதிற்பாம்பாதிவருதலும் மூக்குத்தியைக்கழற்றுதலுஞ் சுவாசமின்னப க்கமோடு தென்பதுமறியாமையாற் சடமா யும் பசிதாகந் தலையிடிவயிற்று வலிமுதலிய தாற்றுக்கமாயுஞ் சுவாசங்கழிதல் வசனநிபோ ய்தலால் அனித்தியமாயுந் தேகத்துக்குட்பிரி வாயிருத்தலாற் கண்டமாயும் எப்பமுதலிய தால் அசுத்தமாயும் மூலாதாரத்திலிருந் து ண்டாதல்முதலிய விகாரமிருக்கையால் விகா ர முள்ளதாயுந் தளர்ச்சிதையறியப் படுதலாற் திரிகியமாயுமிருக் கின்றபுத்தியிருப் பதாலு ம் என்பிராணனென்பது முதலியவனுபவ மிருப்பதாலும் பிராணனிவாயு கன்மேந்திரி யங்களும் அல்லவென்பார் உடலேயறிவாகு மெனிற்பொறிகளைத் துயிலாதறியாவெனவும்.

சுரோத்திராதி பஞ்சேந்திரியங்களே அ றிவென்றுகருதியிருப்பதாலும் ஆட்டுகின்ற வனுள்ளபோது பாவையானது கூத்தாடுவது போல இந்திரியங்களுள்ளபோது சத்தாதி

சகலவிடயமுந் தெரிகின்றது சகலகிருத்திய முநடக்கின்றதுமுதலியயுத்தியிருப்பதாலும் தான்கண்டேன் கேட்டேன் என்பதுமுதலிய அனுபவமிருப்பதாலும்இந்திரியங்களேஅறிவென்னில்சுரோத்திராதி பஞ்சேந்திரியங்களறிவல்லவென் றுஅனந்தஞ்சுருதியிருப்பதாலும் கூத்தாக்கு முதன்மையானவனில்லாத போது பாவையை யாட்டுகிறவனாலேஅந்தொழில்நடவாததுபோல மனோராச்சியத்தினால் அந்தக்கரணமில்லாதபோது இந்திரியங்களிருந்துமவைகளாற் சத்தாதிகளி லொருவிடயமுந் தெரியாதிருத்தல் ஒருகிருத்தியமும்நடவாதிருத்தல்முதலியயுத்தியிருப்பதுமல்லாமல்அந்தக்கரணத்தாலாட்டியடக்கப்படுதலாலுமிதுகண்இதுகாதுமுதலியதெனஅறியப்படுதலாலுமன்னியமாயுஞ்சூக்ஷும பூதசத்துவகுணவியட்டியிலுண்டானதாகையாலுற்பத்தியுள்ளதாயுஞ்சுழுத்திசொப்பன மூர்ச்சைசாக்ஷிணிமபூதாவஸ்தையோகஞ்சமாதிகாலத்திலும் இந்திரிய நினைப்புவருகிறதற்குமுன்னும்அதுநீங்கினபின்னில்லாதஅந்த விரமத்தியகாலத்திலுமதன்காரணமாய பவாதிக்கில்அப்பஞ்சேந்திரியங்களில்லாததால் அசத்தாயும்மனோராச்சியமுதலான காலங்களிலெதிர்ப்படும்விடயமொன்றையுமறியாமையாலும்ஓரிந்திரிய

மற்றஇந்திரியங்களையுமவையின்விடயங்களை
யுமறியாமையாலுஞ்சடமாயும்வெறுப்புவிட
யத்தையறிதலாலும்விருப்பு விடயத்தையறி
யாமையாலுந்துக்கமாயுஞ்செவிடாதியாய்ப்
போதல்கனவாதியில்நீங்குதல்சத்தாதியையறி
வதோய்தலால்அனித்தியமாயும்- காதுமுதலி
யதானத்தில்வேறு வேறாயிருப்ப தாற்கண்ட
மாயும்அசுத்தமானசத்தாதியைக்கேட்டன்மு
தலியதால்அசுத்தமாயும் நினைவெழும்போது
ண்டாதல்முதலியவிகாரமிருக்கையால்விகார
முள்ளதாயும் சத்தமுதலிய விடயத்தையறித
லுமறியாமையுந்தெரிவதாற் றிரிசியமாயுமிரு
க்கின்றயுத்தியிருப்பதாலும் எக்சுரோத்திரா
திகேட்டன்முதலியசெய்த தெனுமனுபவமி
ருப்பதாலுமிந்திரியமறிவல்லவென்பார்கவ்வி
யவிந்திரியந் தானறிவென் றலந்தக்கரணமி
லாதறியாவெனவும்.

மனமேதயறிவென்று சுருதியிருப்பதினாலு
ம்மனதேதேகேந்திரிய பிராணாதிகளைவிளக்கி
ரட்சித்தலமனதுநினைத்த படியாகுதல்ஆட்டு
கிறவனுள்ளபோது வேடதாரியாடுந்தொழில்
நடத்தலபோலமனமுள்ளபோது இந்திரியா
தியின்விவகாரநடக்குதல் முதலியயுத்தியிரு
ப்பதாலும் நானிச்சாவான் றும்வஷியென்ப
துமுதலியவனுபவமிருப்பதாலும்மனமேஅ

றிவென்னில்மனமறிவல்லவென்றனந்தஞ்சுரு
தியிருப்பதினாலும் எஜமானில்லாதபோது ஆ
ட்டுகிறவனாலே வேடதாரியாடுந் தொழில்நட
வாததுபோலப் பித்தமுதலி யதற்புத்தியில்
லாதகாலத்தில்மனதிருந்துந் தேகாதியைவிள
க்கிரட்சித்தலு நினைத்தபடியாகுதலு மிந்திரி
யாதியின் அறிதல்செய் தலாதிவிவகாரநடத்த
லுமில்லாதிருத்தல்முதலியயுத்தியிருப்பதும
ல்லாமற்புத்தியினாலாட்டியடக்கப் படுதலாலு
மிதுமனமெனஅறியப்படுதலாலும் அன்னி
யமாயுஞ்சூட்சுமபூத சத்துவகுண சமஷ்டியி
லுண்டானதாகையாலுத்பத்தி யுள்ளதாயுஞ்ச
மாதிசுழுத்திமூர்ச்சைஉபேட்சைகாலத்திலில்
லாததுந்தவிரமத்தியகாலத்திலும் அதன்கார
ணமாயபவாதிக்கில்அம்மன தில்லாததால்அசு
த்தாயும்ஒன்றிற்பத்தியமூர்த்தியகாலத்திற்றோ
ன்றிபநினைவு சத்தமாதியையறியாமையாற்ச
டமாயும்பல விடயங்களைமெய் போற்கற்பித்
து அதிற்காமாதியுறுதல்முதலியதால்துக்கமா
யுஞ்சமாதிமுதலியகாலத்திலும் நினைவேயுந்
தோறும்ஒழிதலாலநித்தியமாயும்பிராணனுக்
குள்ளாகவுமந் தக்கரணங்களி லொன்றாகவுமி
ருப்பதாற்கண்டமாயும் காமாதிதுர்நினைவுறு
தலால்அசுத்தமாயுஞ்சுழுத்தியிலிருந்துண்டா
தல்முதலியவிவகாரமிருக்கையால் விகாரமு

ள்ளதாயும்தாமதராசதகுணத்தையடைந்தும
யக்கமுதலியதும்இச்சைமுதலியதும்அடை
தலறியப்படுதலாற்-றிரிசியமாயு மிருக்கின்ற
யுத்தியிருப்பதாலும் என்மனதென்பதுமுத
லியஅனுபவமிருப்பதாலும் மனமும்இதுவ
ன்றியில்புத்தியேயறிவென்று சுருதியிருப்ப
தாலும்புத்தியேயலையு மனதையுறுதிப் படுத்
தல்இகலோக பரலோககாரியங்களிற்கர்த்தாவா
ய்திருமித்தல்வாத்தியாருள்ளபோதுசட்டாம்
பிள்ளைபாடஞ் சொல்லிக்கொடுத்துப் பிள்ளை
கள்படிக்கும்விவகாரஞ்சரியாய்நடத்தல்போ
லப்புத்தியுள்ள போதுமன முதலியதின்விவ
கார நடத்தல்முதலாகியயுத்தியிருப்பதாலும்.
நான்புத்திவந்தன்கர்த்தாவென்பது முதலிய
வனுபவமிருப்பதாலும் புத்தியேயறிவென்
னில்-புத்தியறிவல்லவென்று அனந்தஞ்சுருதி
யிருப்பதாலும் பணப்பிரியமில்லாத போ
துவாத்தியார் ஏவிச் சட்டாம் பிள்ளைபாடஞ்
சொல்வித்துப் பிள்ளைகள் படித்தலில்லாதது
போலப் பிரியமில்லாதகாலத்திலும் வேறுவி
டயத்திற்பிரிய முள்ளகாலத்திலும் புத்தியான
திருந்து மனதையுறுதிப்படுத்தலு மிகலோக
பரலோக காரியங்களிற்கர்த்தாவாய் திருமித்
தலும் மனமுதலியதின்விவகார நடத்தலுமி

ல்லாதிருத்தல் முதலிய யுத்தியிருப் பதுமல்
லாமற் பிரியமில்லாவிட்டால் நிச்சயித்தல்மு
தலியசெய்யுஞ் சுதந்தரமில்லாமையாலு மி
துபுத்தியென்று அந்தக்கரணத்திக்கு மேலான
சைதன்யமாகச்சிவனுவதியப்படுதலாலும் ஆ
ட்டியடக்கப் படுதலாலுமன்னியமாயும் தன்
மாத்திரை சத்துவகுணசமஷ்டியிலுண்டான
தாகையா லுற்பத்தியுள்ளதாயும் துஷ்ணீம்
பூதாவஸ்தையோகஞ் சமாதிநித்திரை மூர்ச்
சைமுதலிய காலத்திலில்லாததுந்தவிரமத்தி
யகாலத்திலுமதன்காரணமாயபவாதிக்கில் அ
ப்புத்தி யில்லாததால் அசத்தாயும் பிரியமில்
லாதவிடயத்தைச்சரியாக நிச்சயித்தறியாமை
யாற் சடமாயும்,தேகாதியின் தர்மமாதியைத்
தனதென்று அபிமானித்தல்,பூரணாத்மாவைக்
கர்த்தாவாதியாகப்பின்னப்படுத்தல், ஒன்றை
ப் பிழையாகவறிதல் முதலியதாற்றுக்கமாயு
ம்,யோகமுதலிய காலத்திலுஞ் சாக்கிரத்திற்
றிரீக்ஷணத்தில் நிச்சயமாதியோயுந் தோற்று
ம் ஒழிதலாலஅனித்தியமாயும் மனதுக்குள்ளி
ருத்தல் முதலியதாற் கண்டமாயும் இழிவாய்
நிச்சயிக்கின்றதால் அசுத்தமாயும் ஓர்சங்கற்
பத்திலுண்டாதல் முதலிய விகாரமிருக்கை
யால் விகாரமுள்ளதாயும் நவகுணமடைதல்
அபிமானமுறுதல் முதலியது அறியப்படுத

லாற் பிரிசியமாயு மிருக்கின்ற யுத்தியிருப்ப தாலும் என்புத்தி யென்பதுமுதலியவனுபவ மிருப்பதாலும் புத்தியு மறிவல்ல வென்பார் கரணமறிவன்று லெவ்விடயந்தானறிந்துந் தனையறியாத தனையெழிற் சீவனுட்டி விக்கு மெனவும்.

ஆனந்தமயனாகிய சீவனறிவென்பதாகச்சுருதியிருப்பதாலும் சுழுத்தியிற்புத்திமுதலியவெல்லாமிறந்துசூனியமாயிருப்பதுமறிதல் சம்பளப்பிரியமுள்ளபோது வாழைக்காயைப்பழுக் கச் செய்விக்குந்தொழில் நடத்தல்போல பிரியமுள்ளபோது புத்தி நிச்சயமுதலிய தொழில்நடத்தல் முதலாகியயுத்தியிருப்பதாலும் நானறிவேனறியே னென்பதுமுதலியவனுபவமிருப்பதாலும் சீவனே அறிவென்னிற் சீவனறிவல்லவென்று அனந்தஞ்சுருதியிருப்பதாலுஞ் சுழுத்தியிற்சூனியமாயிருத்தலுஞ்சுகமாயிருத்தலுமறிகின்ற சீவனுபேட்சாம்வேளையில்லாதிருத்தல் பழஞ் சாப்பிடுகின்ற தற்காசச் சம்பளங்கொடுக்கு மிராசனில்லாவிட்டால் வேலைக்காரனாலே பழுக்கவைக்குந் தொழில்நடவாததுபோல அகண்டாகார அறிவானந்தமாகிய ஆத்மாவில்லாவிட்டாற்பிரியந்தோன்றிப் புத்திமுதலியதின் றொழில் நடத்தற்கேதுவில்லாதிருத்தல் முதலியயுத்தி

யிருப்பதுமல்லாமற் பிரியமாதி யிடையிற் றேன்றியழிதலாலும் சீவனெனவன் ஆத்மாவி ஞலிவன்சீவனென்றுஅறியப்படுதலாலும் ஆட்டியடக்கப்படுதலாலும் அன்னியமாயும்மேலப்பிரகிருதியிராசதகுண அவித்தையிற் பிரதிவிம்பித்திருக்கின்றவகையாலுற்பத்தி யுள்ளதாயும் உபேட்சாவேளைமுதலான காலத்திலில்லாததுந்தவிரமற்றகாலத்திலும் அதன்காரணமாக அபவாதிக்கில் சீவனில்லாததால் அசத்தாயும்தானல்லாததைத்தானென்று மயங்குதலாலும் ஆகாதவிடயத்திற் பிரியமோதப்பிரமோதமடைதலாலுஞ்சடமாயும் கர்த்தாவாதியாயிருப்ப தாற்றுக்கமாயும்அவ்விருப்பு நிலையற்றதானதால்அனித்தியமாயும் அதனாலும் பின்முதலியதினாலுங்கண்டமாயும் அறியாததன்மையினால்அசுத்தமாயும்ஆணவத்திலிருந்துவெளிப்பட்டதானவுண்டாதல் முதலிய விகாரமிருக்கையால் விகாரமுள்ளதாயும்மயங்குதல் அறிவறியாமையாயிருத்தலறியப்படுதலாற் கிரிசியமாயு மிருக்கின்ற யுத்தியிருப்பதாலும் என்சீவனென்பது முதலிய அனுபவமிருப்பதாலுஞ் சீவனறிவல்ல வென்பார் சீவனறிவென்றால்வவ்வியதானல்லாதவெல்லாந்தா னென்றேமயங்குமெனவும்.

சீவன் முதலியவைகளையறிகின்றஞானசொரூபமேயறிவென்றுசுருதியிருப்பதாலும்பஞ்சகோசங்களின் அன்னுவயவெதிரேகங்களைக்கண்டுகொண்டு எந்தக்காலத்திலு மிருப்பதுமல்லாமலிதுவெனமற் றொன்றினாற்சுட்டியறியப்படாமலும் ஆட்டியடக்கப் படாமலுமிருப்பதாற்றானும்தா னுற்பத்தியாகின்றதற்கேதுவானவேறொன்றில்லாதபடியாலுற்பத்தியற்றதாயும்விருத்திமுதலியவை தோன்றியிருந்தொடுங்குதற்கேதுவாயிருப்பதாற்சத்தாயும்அஷ்டப்பிரகாசத்தையும்விளக்கியறிதலாற்சித்தாயும்பொருளாதிஆறையும்விட்டும்விடப்படாத அதிப்பிரியவஸ்துவாதலா லானந்தமாயும்நான்குஅபாவமு மற்றுச்சதோதயமாயிருத்தலால் நித்தியமாயும் மூன்றுபரிச்சேதமுமற்றுச்சர்வத்திலுஞ் சம்பந்தித்திருப்பதாற்பூரணமாயும்சகலமுந் தன்னிடத்தில்விவர்த்தமாகையாற்சுத்தமாயும் என்றுமொருபடியாயிருத்தலால்விகாரமற்றதாயும் தன்னையறியத்திருக்குமவேறொன்றில்லாதபடியால்அதிரிசியமாயுமிருக்கின்ற யுத்தியிருப்பதாலும்நான்சர்வவிலட்சணன் நான்சர்வசாட்சி நான்சர்வாதாரன்நான்சர்வாதிட்டானன் நான்சர்வாத்மா என்பதுமுதலிய அனுபவமிருப்பதாலுஞ்சு

யம் பிரகாசமானதானே அறிவென்பார் அதைப் பகுத்தறிய வந்தவறிவறிவே யெனவுங் கூறினார்.

(இ-ம்) உடலாதி அறிவல்லவென் றுரைரச் சுருதியுத்தி அனுபவங் கூறி அறிவின்னதென த்தெரிவித்ததாம்.

(௰அ)

(அ-கை) முதல்வாக்கியத் திரண்டாம்பதத் திற்கருத்தங்கூறல்.

(கவி) இந்நிலையே ஞானமென்றபதத்தினு ண்மையுரைத்தோமினிப் பிரமமென்ற பதத் திலக்கணங்கேண்மாணுமன்னுபிரமாதிபலவு யிர்களுக்குமுயிராய்மற்றதனைப் படைத்தளி த்துமாற்றுதற் கேதுவுமாய்த், தன்னுபரிபூர ணமாயிருப்பதெதுவதுவாந் தூயபதமிரண் டினுக்குஞ் சோதியொன்றாகையினால், நன்னி லையேநமதிடத்தி லறிவுமதுவெனலால் ஞான மேபிரமமென நவின்றதுவாக்கியமே.

இ-ள். இந்நிலையே-இந்தமுறையே-ஞான மென்றபதத்தின்- பிரக்கியானமென்னு முந் தினபதத்தினுடைய- உண்மை எதார்த்தமான அர்த்தத்தை-உரைத்தோம்-மொழிந்தோம்இ னி-இப்பால்-பிரமமென்றபதத்து-பிரமமெ ன்ற-விரண்டாம்பதத்தினுடைய-இலக்கணம் இயல்பை-கேண்மாணு-சீடனே கூறுதுங்கே ட்பாய்-மன்னு- நிலைபெற்றிருக்கின்ற, பிரமா

தி அயன்முதலான-பலவுயிர்களுக்கும்-சராச ரமான அனந்தசிவர்களுக்கும் உயிராய்- ஆத் மாவாய்-அதனை-அச்சராசரவுயிர்களை-படை த்துமாற்றுதற்கு-சிற்பிரதானத்தானிமித்தகா ரணமாயிருந்து சிருட்டித்து இரட்சித்து சங் கரிக்கின்றதற்கு-எதுவுமாய்- ஜடப்பிரதானத் தாலுபாதானகாரணமுமாய்- நின்று- நிறைந் த-பரிபூரணமாய்-அபரிச்சின்னமாய்-இருப் பதெது-இருக்கின்ற சொரூபமியாதோ-அது வாம்-அதும்வெ பிரமபதத்து லக்கணமாம்-ஓர் தேகத்திலிருக்கு மறிவுஎங்ஙனஞ் சிருட்டியா திக்கேதுவாயும்-பூரணமாயு மிருக்கும்பிரம மாகுமெனின்-தூய- வாச்சியார்த்தமில்லாது பரிசுத்தமாகிய-பதமிரண்டினுக்கும்-பிரக்ஞி யாணம்பிரமமென்னு மிரண்டுபத லட்சியார் த்தத்துக்கும்-சோதி-சித்துலட்சணம்- ஒன்று கையினுள்-ஒருதன்மையாயுள்ளதாகையால்-ந ன்னிலேயே- ஆனந்தமாயிருக்கிறபிரமமானது பலவுயிர்களிடத்து மிருக்குமென்றமுறையே நமரிடத்திலறிவும்- நம்மிடத்திலுள்ள ஞான சொரூபமும்-அதுவெனலால்- அந்தப்பிரம மேயென்றுமேவதங்கூறுகையினால்- ஞானம்பிர மமென- பிரக்கியானமேபிரமமென்று-ந வின்றதுவாக்கியம்- முதல்வாக்கியஞ்சொல்ல ப்பட்டது-எ-அமற்றென்பது-அகை.

(பர்ம் ஏழுவகைப்பிறவிச் சீவர்களேக்காட்டிலும் நித்தியமாயிருக்கப்பட்ட பிரமமென்பார்-மன்னுபிரமாதியெனவும்- ஆகாசம்நான்குபூத பவுதிகங்களுக்கு முள்ளும்புறம்பும்வியாபகமாயிருத்தல்போலச் சகலசீவர்களுக்குமுள்ளும்புறம்பும்பிரமம் வியாபகமாயுஞ்சரீரத்திரயத்தைவிடச்சீவன்பிரியமாயிருப்பதுபோலச்சீவனிலும்பிரமம்பிரியமாயுஞ்சரீரத்திரயத்தைச்சீவனாட்டுவதுபோலச்சீவனைப்பிரமமாட்டுவதாயுமிருக்கின்றதென்பார்-பலவுயிர்களுக்குமுயிரெனவும்- பழுதையினிடத்திற்பாம்புமுதலியவை தோற்றியிருந்தொடுங்கப்பழுதையேதுவா யிருக்கின்றதுபோலச்சராசரப்பிரபஞ்சந்தன்னிடத்திற் றோற்றியிருந்தொடுங்குதற்குப் பிரமமிடமா யிருப்பதென்பார்- மற்றதனைப் படைத்தளித்துமாற்றுதற்கேதுவெனவும்- மூன்றுபரிச்சேதமற்றபூரணமாயிருப்பதென்பார்- துன்னுபரிபூரணமெனவும்-திரிதீவட்டியென்று உபாதியினாற்பேதமாயிருந்தாலும்நெருப்பொருதன்மையாயிருத்தல்போலஅறிவும்பிரமமுமென்றுஉபாதியால் வேறுபோலிருப்பினுஞ்சித்திலட்சணத்திலொருதன்மையா யிருக்கின்றதென்பார்-பதயிரண்டினுக்குஞ் சோதியொன்றெனவும்-எங்குமுள்ளவாகாசமேயோர்கட

த்திலுள்ளஆகாசமுமாதல்போலப் பிரமாதிச ராசரங்களிலிருக்கும் பிரமமே நின்னுடைய வோர்தேகத்திலுமிருக்கிற அறிவுமென்றுவே தங்கூறுவதாமென்பார்- நன்னிலேயேநமதிட த்திலறிவுமதுவெனலாமெனவுங்கூறினர்.

(இ-ம்.) சத்தியக்கியானவனந்தா னந்தவ ஸ்துவே பிரமமெனக் கூறிக்கடாகாச மகா காசமென்று வுபாதியாற் பேதமாய்த் தோற் றினு மொன்றாயிருத்தல்போல ஞானமும்பி ரமமுமுபாதியால் வேறுபோற் றோற்றினும் ஒன்றென-வயிக்கியங்காட்டியதாம். (யகூ)

(அ-கை.) இரண்டாம்வாக்கியவுரைகூறல்.

(கவி.) வேறு. அகம்பிரமாஸ்மி யென்றே யறைந்திடும்வாக்கியந்தான், பகும்பதமூன் றதாகும்பன்னியவகமேதென்னிற், சகம்பரிபூ ரணத்தாற்றன்பரமார்த்தமாகி-யுகந்தொறுமொ ழியாதாகி யொன்றெனுந்தாக்காதாகி.

(இ-ள்.) அகம்பிரமாஸ்மியென்று-அகம் பிரமாஸ்மியென்பதாக-அறைந்திடும்- இரண் டாம்வேதத்திற் கூறுகின்ற-வாக்கியம்- இரண் டாவதுவாக்கியத்தில்-பகும்பதம்-பிரிவானப தங்கள்-மூன்றதாகும்- அகமென்றும் - பிரம மென்றும்-அஸ்மியென்றும்-மூன்றாம்- பன் னிய - சொல்லியவற்றுள் - அகமேதென்னில்.

அகம்பதத்தினருத்தமியாதென்றால்- சகம்-பிரபஞ்சத்தில்- பரிபூரணத்தால்- வியாபகமாயிருப்பதால்- தான்பரமார்த்தமாகி- தானுண்மையாய்-உகந்தொறும்-எந்நாளும்- அழியாதாகி- கெடாததாய் - ஒன்றொடும்- சரீராதியவொன்றின்விகாரத்திலும்- தாக்காதாகி- கூடாததாய் எ—று.

(ப-ம்.) ஆகாயம்போற்சகதமெதங்கும்வியாபக மாயிருபத்தெட்டுதத்துவ மாகின்றகற்பிதங்கட்கு அதிட்டானமாயிருப்ப தென்பார்- சகம்பரிபூரணத்தாற்றான் பரமார்த்தமாகியெனவும்- கல்முதற்காலங்களுமதிற் றோன்றும் வஸ்துக்களும் அழிவதுடன் அழியாத தென்பார்-உகந்தொறு மழியாதாகியெனவும்- சலத்திற்குள்ளும் புறம்புமாயிருக்குமாகாயஞ்சலவிகாரமான குமிழியாகாதது போலத்தேகேந்திரியப்பிராணகரண அவித்தைசீவனுக்குஉள்ளும்புறம்புமிருந்தும் அவையின்சப்பாவவிகாரத்திற்கூடாததென்பார் ஒன்றொடுந்தாக்காதாகியெனவுங்கூறினர்.

(அ-கை) இதுவுமது.

(கவி.) அனைத்தையுங்கடந்ததாகி யனுபவித்தறிவதாகி,நினைத்ததேகத்தினுள்ளே நிச்சயப்புவெதாகி,வினைத்த ருக்குமதேகத்தைவி

ளக்குவதாகித்தானே , தனக்கிணையென்னலா
குஞ் சைதன்னிய மகங்காமெனன்பார்.

(இ-ள்.) அனைத்தையும் - சீவன்வரைசகலத்
தையும்- கடந்ததாகி- பொருந்தாததாய்- அ
னுபவித்தறிவதாகி-சுவானுபவத்திறுலுணர்வ
தாகி-நினைத்ததேகத்தினுள்ளே- விசாரஞ்செ
ய்கின்றமுமூட்சுவின்சரீரத்திற்றனே-நிச்சய
ப்படுவதாகி- தானெனத்தெளிந்துக் கொள்ள
த்தகுவதாய்-விளைத்த- பஞ்சவிடயத்தைவிள
க்கியறியப்பட்ட- சூட்சுமதேகத்தை- லிங்கச
ரீரத்தை-விளக்குவதாகி - பிரகாசிப்பிக்கின்ற
தாய்-தானேதனக்கிணை- தனக்குத்தானேசமா
னம்- என்னலாகும், என்றுகூறப்படுவதான-
சைதன்னியம்-சித்தே- அகங்காமெனன்பார்-
அகம்பதார்த்தமெனப்பெரியோர்கள் கூறுவா
ர்கள்-எ-று.

(ப-ம்.) சலத்திற் சம்பந்தித்திருக்கு மாகா
யத்திற் சலத்தினுடைய சீதளமொட்டாதது
போல நிரந்தரமாயிருப்பதாற் சரீரஇந்திரி
யபிராணகரணம் அவித்தைசீவனுடையசுபா
வத்தைப்பொருந்தாததென்பார் அனைத்தை
யுங்கடந்ததாகியெனவும் - சமாதியிற்றனுயி
ருந்து அபரோட்சமாயறியப் பட்டதென்
பார்- அனுபவித்தறிவதாகியெனவும் - இதர
தெய்வங்களை யொவ்வோரிடத்தி லன்னியமா

யக்காண்பதுபோலவின்றிச் சரீராதிகளைநே திசெய்தவிடத்திற்றானே ஆத்மாவாகின்றதெ ய்வந் தானாகத்தெளிந்து கொள்ளத்தக்க தெ ன்பார்நினைத்ததேகத்தினுள்ளே நிச்சயப்படு வதாகியெனவும் - சத்தபரிச ரூபரசகந்தமா ன பஞ்சவிடயத்தை விளக்கியறியப்பட்ட ஆ ரோயப் பிரகாசமான சூட்சுமதேகத்தையும் பிரகாசிப்பிக்கு மெதார்த்தப் பிரகாசமுடை யதென்பார்வினைத்த சூக்குமதேகத்தை விளக் குவதாகியெனவும் தன்னைப்போற் சச்சிதான ந்தலட்சணமுள்ளதுவேறில்லையென்பார். தா னேதனக்கிணையென்னலாமெனவுங்கூறினார்.

(இ-ம்.) இரண்டாம் வாக்கியத்தி லகமென் னுமுதற்பதத்துக்குரைகூறியதாம். (உக)

(அ-கை.) அவ்வகம்பதார்த்தத்தை யானறி ந்துகொள்வதெங்ஙனமெனில்.

(கவி-) இன்னவையறியுமாறுவியம் புதும
ஞ்ஞானத்தான், முன்னகமென்றவுன்னை முடி
த்ததே யகமாங்கண்டா, யென்னைமனை யெ
ன்பாய்போலென்னுடலென்றுகாணி, லன்ன
தேகத்தைவேறு யறிந்தநிந்திரியந்தானும்.

(இ-ள்.) இன்னவை-இவ்வகமபத அருத்து த்தை-அறியுமாறு-தெரிந்துகொள்ளும்விதத் தை-இயம்புதும்-கூறுகின்றோம்- அஞ்ஞான த்தால்-அறியாமையினாலே- முன்- பூர்வமக்கி

யானதிசையில்- அகமென்ற- தேகேந்திரியாதிகளை நானென்றம். உன்னை- சிதாபாசனுன உன்னை-மூடித்து-கெடுத்தவிடத்தில்-அதே,சேஷிக்கின்றசைதன்னிய மெது வோவதுவே. அகமாங்கண்டாய்- அகம்பதத்துக்கு அருத்தமாகுமறிந்துகொள்வாய்- அவ்வகம்பதார்த்தத்தை வேறுபடுத்தியறிவதெங்ஙனமெனில்- என்னை-எனதுமாதா-மனை-எனதுமனைவி- என்பாய்போல - என்றுனக் கன்னியமாய் நீயிசைக்கின்றதுபோல - என்னுடலென்று- எனதுதேகமென்று-காணில்,உனக்கன்னியமாய்க் காண்பாயாகில்- அன்னதேகத்தை - அத்தன்மையானசரீரத்தை-வேறாய்,அன்னியமாய்-அறிந்தது- தெரிந்தது- இந்திரியம்-பொறிகள்- தானும்-அவைகளியாகும்-எ—று.

(ப-ம்)அறியாமையால் மாதா பிதா மனைவி முதலியவர்களைத்தானுகக்கருதி அவர்கள்படுஞ்சுகதுக்கத்தையுறுகின்ற அஞ்ஞானியானவன் அறியாமைநீங்கி வேறுகண்டபோது சுகதுக்கம்நீங்கல்போல அறியாமையாற்றனென்றிருக்குந்தேகமுதற் சீவன்வரையுள்ளதைத்தனக்குவேறெனக்கண்டாலவற்றல் வருஞ்சுகதுக்கமற்ற சாட்சியேயாவாயென்பார் அஞ்ஞானத்தான்முன்னகமென்றவுன்னை மூடித்தமேதய

கமாங்கண்டா யெனவும்- தேகம் நானென்ப தென்றுசுருதி யிருப்பதினாலும் தீப்பட்டவி டத்திற்புத்திரமித்திரதாராதிகளைவிட்டு நான் பிழைக்கவேணுமென்று வோடிப்போயுடலை க்காக்கின்றயுத்தியினாலும் நானின்ன வர்ணாச் சிரமம்நாமரூப மூர்முதலிய துடையவனெ ன்றபேசுமனுபவத்தினாலும் சரீரமேநானெ ன்பதென்னில்சரீரம்நானென்பதல்லவென்ற னந்தஞ்சுருதியிருப்பதினாலும் தாளிக்காற்று கொசுகுமுதலியவுற்றவிடத்திற் சரீரத்தைவி ட்டுஇந்திரியங்களைப் பதனம்பண்ணுகின்றப டியால்அன்னியமாயும்பதி னெட்டாம்பாட்டி ன்பதசாரத்தில்காட்டியிருக்கின்றபடி உற்பத் தியுள்ளது அசத்து சடம் துக்கம் அனித்தியம் கண்டம்அசுத்தம்விகார முள்ளதுதிரிசியமாக விருக்கின்றயுத்தி யிருப்பதனாலும் என்தேக மின்னவர்ணாச்சிரமம் நாமரூப மூர்முதலிய துடையதென்றபேசுமனுபவமிருப்பதாலு ம்தேகம்நானென்பதல்ல இந்திரிய நானென் பதாமென்பார்என்னைனேமனையென்பாய்போ லென்னுடலென்றுகாணிலன்னதேகத்தைவே றுயறிந்தஇந்திரியந்தானுமெனவுங்கூறினர். ( (அ-கை) இதுவுமது.

(கலி) இந்தியமகமென்றுவு மென்கணெ ன்காலென்கையென், றந்தமுட்கரண நீயா

புன்மனமென்கையாலே,யந்த வுட்கரணந்தானுமகற்றியசீவனீயாய்ச், சந்ததமென் சீவன்றனென்கையாற் சாட்சியாவாய்.

(இ-ள் இந்தியம்- வாக்காதிதசேந்திரியங்களை-அகமென்றாலும்- நானென்று சொல்லுவையேயானாலும்-என்கண்- எனதுநேத்திரம் என்கால்,எனதுபாதம்-என்கை-எனதுகரம்,என்று-என்பதுமுதலாகக்கூறி-உந்தும்-வேறாகநீக்குகின்றபடியால்-உட்கரணம்-அங்ஙனநீங்குமந்தக்கரணங்கள்-நீயாய்- நீயாவாய்-அவ்வகக்கரணங்களை யானென்னையானாலும் உன்மனமென்கையால்- உனதுள்ளமென்று னக்கன்னியமாகக்கூறுகின்றபடியால்- அந்தவுட்கரணந்தானும்- அவ்வகக்கரணத்தையும்- அகற்றிய:வேறாக்கிய-சீவன்-சிதாபாசன்- நீயாய்-நீயாவாய்-சீவனேயானெனப்பகருவையானாலும்-சந்ததம்-எப்பொழுதும்-என்சீவன்- எனதுயிர்-என்கையால்-என்றுனக்கன் னியமாயியம்புவதால்- சாட்சியாவாய்- சீவசாட்சியேநீயாவாய்-எ—று-

(ப-ம்)இந்திரியங்கள்நானென்பதென்று சுருதியிருப்பதாலும் ஆக்கினை வந்தவிடத்தில்அடித்தல்விலங்குபோடுதல் செய்து இந்திரியச்சேதஞ்செய்யாதென்னைக்காப்பாற் றென்று இந்திரியங்களைப்பேணிக் கொள்ளுகின்றபு

த்திரினாலும் நான்கண்டேன் கேட்டேன் நான்
குருடன் செவிடன் நான்கொடுத்தேன் நடந்
தேன் நானொண்டி, ஊமைமுடவன் என்பது முத
லியவனுபவமிருப்பதாலும் இந்திரியங்களை
நானென்பதென்னில் இந்திரியங்கள் நானென்
பதல்லவென்று அனந்தஞ்சுருதியிருப்பதாலு
ம் யோசனைகாலத்திற் பத்திந்திரியங்களையு நி
க்கிரகம்பண்ணி அந்தக்கரணத்தைப் பெறு
கிறபடியாலன்னியமாயுஞ் சூட்சுமபூதசத்து
வராசதகுணவியட்டியிலுற்பத்தியானதாயும்-
முன்பின்னில்லாமல் மத்தியகாலத்திலும் அப
வாதிக்கிலில்லாததாலசத்தாயும் மனோராச்சிய
முதலியகாலத்திற்சத்தாதிவசனாதிவிடயத்தை
யறியாமையாலும் ஓரிந்திரியமற்றவிந்திரியங்
களையுமவற்றின் விடயங்களையும் அறியாமை
யாலும்சடமாயும் வெறுப்பான சத்தாதிவிட
யத்தை யறிதல்வசனாதி தொழிலைச் செய்தலா
லும்-விருப்பானவிடயத்தை யறியாமை, தொ
ழிலைச்செய்யாமையாலுந் துக்கமாயுஞ் செவு
டாதிஊமையாதியாயப்போதல்கனவாதியில்
நீங்குதல்சத்தாதியையறிவதூஉ வசனாதி தொழி
லைச்செய்வ தோய்தலால் அனித்தியமாயுங்கா
துமுதலிய வாய்முதலியதானத்தில் வேறுவே
றாயிருப்பதாற்கண்டமாயும் அருவருப்பான
சத்தாதியையறிதல்வசனாதிதொழிலைச்செய்து

லால்அசுத்தமாயும் தினவெழும்போதுண்டா
தல்முதலிய சட்பாவ விகாரமுள்ளதாயும்சத்
தமுதலியதறிதல்அறியாமைவசனாதி தொழிற்
செய்தல்செய்யாமைதெரிவதாற் கிரியையமாயு
மிருக்கின்றயுத்தி யிருப்பதாலும் என்கண்கா
துகண்டதுகேட்டது குருடுசெவுடு எனவும்எ
ன்கைகால்கொடுத்தது நடந்தது நொண்டிமு
டமெனவும்பேசு மனுபவ மிருப்பதாலும்இ
ந்திரியங்கள் நானென்பதல்ல அந்தக்கரணங்க
ள்நா னென்பதாகுமென்பார் இந்தியமகமெ
ன்றுலும்பெண்கணெண்கா லென்கையென்றுந்
தமுட்கரண நீயாயெனவும்- அந்தக்கரணம்
நானென்ப தென்று சுருதியிருப்பதாலும்அ
ந்தக்கரணங்களுக்குத்துக்கம் வரும்போதுநா
ஞ்சுகமாயிருக்க வேணுமென்று துன்பத்துக்
ககதுவான இந்திரியங்களை நீக்குகின்றயுத்தி
யிருப்பதாலும் நானிச்சாவான்புத்திமான் எ
ன்பதுமுதலியவனுபவ மிருப்பதாலும் அந்
தக்கரணமேநா னென்ப தென்னில் அந்த
க்கரணம் நானென்பதல்ல வென்றனந்தஞ்சு
ருதியிருப்பதாலுஞ்சுழுத்தி சமாதிகாலத்தில்
அந்தக்கரணத்தைநீக்கிச்சீவனைப் பேணுகை
யால் அன்னியமாயும்பதினெட்டாம் பாட்டி
ன்பதசாரத்திற் காண்பித்திருக்கின்றபடியுந்

பத்தியுள்ளது அசத்துசடந்துக்கம் அனித்தியங்கண்டம் அசுத்தம்விகார முள்ளது, திரிசியமாகவிருக்கின்ற யுத்தியிருப்பதாலும் என்னந்தக்கரணமிச்சைமுதலிய துடையதென அனுபவமிருப்பதாலும் அந்தக்கரணம் நானென்பதல்ல சீவன் நானென்பதாகுமென்பார். உன்மனமென்கையாலே அந்தவுட்கரணந்தானு மகற்றியசீவனீபாயெனவும்- சீவன் நானென்பதென்றுசுருதியிருப்பதாலும் சீவனுக்குத்துக்கம் வரும்போது நாம்சுகமாயிருக்க வேணுமென்று துன்பத்துக்கேதுவான அந்தக்கரணத்தை நீக்குகின்றயுத்தி யிருப்பதாலும் நான்கர்த்தா போக்தா வென்று பேசல் முதலியவனுபவ மிருப்பதாலும்சீவனே நானென்பதென்னில் சீவன் நானென்ப தல்லவென்றனந்தஞ்சுருதி யிருப்பதாலும் மரணகாலத்திலுந் தற்போதமய்க்குங் காலத்திலும் சீவனை நீக்கி ஆத்மசுகத்தைப் பேணுகையால் அன்னியமாயும் பதினெட்டாம் பாட்டின் பதசாரத்திற் கர்ணித்திருக்கின்றபடி உற்பத்தியுள்ளது அசத்து சடம் துக்கம் அனித்தியம் கண்டம் அசுத்தம்விகார முள்ளது திரிசியமாகவிருக்கின்ற யுத்தியிருப்பதாலும் என்சீவனென்பதுமுதலிய அனுபவமிருப்பதாலும் சீவன் நானென்பதல்ல சாட்சியே நானெ

ன்பதென்பார் சந்ததமென் சீவன்றானென் கையாற்சாட்சியாவாயெனவுங்கூறினார்.

(இ-ம்) தேகாதியகம்பதார்த்தமல்லவென்று ணரச்சுருதியுத்தி அனுபவங்கூறினதாம் (உ௬)

(அ-கை-) இரண்டாம்வாக்கியத்தில் அகமென்னு முதற்பதத்தருத்தமிதுவெனக் கூறியிரண்டாம்பதத்துக்குரைகூறல்.

(கவி.) அப்படியெல்லா நீக்கியறிவதேயக மாங்கண்டாய், செப்பியபிரமமென்னச் செறிபதந்தானேதானு, மொப்புயர் வற்றுவேறுருபாதியற்றகண்டரூபந், தப்பிலாப்பூரணத்தாற் சச்சிதானந்தமாமே.

(இ-ள்.) அப்படி-முற்கூறியபிரகாரம்-எல்லாம்-தேகமுதல் சீவன்வரையனைத்தையும்-நீக்கி-வேறாக்கி-அறிவதே-உணருகின்றதெதுவோவதுவே-அகமாங்கண்டாய், அகம்பதார்த்தமென்று தெரிந்துக்கொள்வாய்-செப்பிய-முன்சொல்லிய-பிரமமென்ன-பிரமசொரூபமென்பதாக-செறிபதம்-பொருந்தாநின்ற சொல்லுக்கருத்தமியாதெனில்-தானேதானும்-காரணமற்றுத்தானுயிருக்கின்றதாய் ஒப்புயர்வற்று-சமானாதிகமின்றி-வேறுருபாதியற்று-அன்னியமாகிய வோருபாதியுமின்றி-அகண்டரூபம்-கண்டிக்கப்படாதசொரூபமாய்-தப்பிலா-கெடாத-பூரணத்தால்-வி

யாபகமாய்-சச்சிதானந்தமாம்- அஸ்தியாதிப் பிரியசொரூபமாகும்-எ—று.

(ப-ம்) தூலசரீரம்பூதங்கள் சூட்சுமபூத பவுதிகங்கள் அவித்தையாவிசிட்டன்மாயாவி சிட்டன் ஒன்றுக்குமேலொன்று காரணமாயி னைகட்கெல்லாஞ்சுத்த சைதன்யமானதான் காரண மாயிருத்தல்போற்றனக்கு வொருகாரண மு மின்றியிருக்கின்றஅகாரணமென்பார்தானே தானுமெனவும்-"மாயைமுதலிய உபாதியற்ற தென்பார் வேறுருபாதியற்றதெனவும்- லோகசித்தாந்தம் அருகனுதியாகமம்- தேவக ந்தருவாகமம்- அயனுகமம்- அரியாகமம் அர னுகமம் புராணம்பாரதம் நீதிசாரம்சன்மகா ண்டம் பத்திகாண்டமாகிய இவைகள் போல மேலொன்றிலுற்கண்டிக்கப் படாத உபநிட தநிச்சயித்தசச்சிதானந்தசொரூபமென்பார் அகண்டரூபமெனவும்-ஆகாசாதிகளைப் போ ற்கெடுதலில்லாத வியாபகமென்பார்தப்பிலா ப்பூரணமெனவும்- பழுதையைப் போலச்சி ருட்டிக்குமுன்னும் - பிரளயத்துக்குப் பின் னும் மத்தியிலு மிருப்பதென்பார் சத்தென வும்-சூரியன்போலத்தானுஞ்சுயம்பிரகாசமா யிருந்து சிருட்டிமுதலுண்டாகப் பட்டதுக ளெல்லாம்விளக்குவதென்பார் சித்தெனவும்- அமிர்தம்போலத்தானுமானந்த மாயிருந்து

தன்னையடுக்கும் விருத்திக்குச்சமாதி சுழுத்தி விடயானந்தங்கொடுப்பதென்பார் ஆனந்தமெனவுங்கூறினர்.

(அ-கை.) இரண்டாம் வாக்கியத்திற் பிரமபதத்தருத்தமிது வெனக்கூறி மூன்றும் பதத்துக்குரைகூறல்.

(கவி.) இவையது வஸ்மியென்னு மீறுள பதார்த்தஞ்சொல்லிற்-சுவைதருமயிக்கியமாகித்துவிதத்திலுபாதியற்றுப் பவமகற்றறிவானந்தப் பரங்கடலாகுமென்றேதவ வடிவான ஞானத்தலைவர் களுரைப்பர்தாமே.

(இ-ள்) இவை-இங்ஙனங்கூறியது- அது, பிரமபதார்த்தயாம்-அஸ்மியென்னும். அஸ்மியென்கின்ற - ஈறுளபதார்த்தம்- அந்தத்திலுள்ளசொல்லுக்கருத்தம்- சொல்லில்- அதைப் பகருமிடத்தில் துவிதத்தில்- அகம்பதம்பிரமபதமிரண்டிலுமுள்ள, உபாதியற்று- வாச்சியார்த்தங்கணீங்கி- சுவைதரும்- ஆனந்தரசத்தைக்கொடுக்காநின்ற- அயிக்கியமாகி- ஏகமாகி-பவமகற்று-சன்மமரணத்தை நீக்குகின்ற- அறிவானந்த - சிற்சுக - பரங்கடலாகு மென்று - இவ்விய சிந்துவா யிருக்கு மென்பதாக-தவவடிவான - தவசொரூபிகளான - ஞானத்தலைவர்கள்- பரஞானிகள் உரைப்பர் ஓதுவார்கள்- எ—று.

(ப-ம்) தேவதத்தன் ஒருவனு யிருப்பது போலவும்கடாகாசமும் மடாகாசமு மேகமா யிருப்பதுபோலவும்-இரண்டுபத வாச்சியமு ம்நீங்கிஇலட்சியமான து துக்க நிவர்த்தியாகி யஏகமா யிருக்குமென்டார் சுவைதருமயிக்கி யமாகித்துவிதத்திலுடாதியற்றெனவும்-மறு டானந்தமுதலியபதினொருவகையாகிய ஆன ந்தமும்பிறவி கொடுப்பதாய்ச் சடமாய்த்திவு லமேடான்றிருப்பதால் அவையல்லபிறவிநீக்கு வதாயறிவாய்ப் பிரளயகால வெள்ளம்போன் றிருக்கும் அகண்டாகாரசொருப மென்பார் பவபடகற்றறி வானந்தப்பரங் கடலெனவும்-சு பேட்சையாதி ஞானபூமிமூன்றி னப்பியாச மாகியதவத்திற்குமேலான நாலாவதுசத்துவா பத்திமு தலிய பூமியனுபவத்தை யடைந்து ஆத்மசாட் சாத்காரமுடன் போதிக்கும்வல்ல மையுடையவர்களென்பார்- தவவடிவானஞா னத்தலைவர்களெனவுங்கூறினார்-

(வி-ம்)சுபேட்சையாதி மூன்றுபூமியினப் பியாசமெங்ஙனந்தவமென்னில்-பஞ்சாக்கினி மத்தியாதிதபசைத்தவமென்றும் அதைச்செ ய்தோர்க்குச்சொர்க்காதிலோக மூண்டென்று ஞ்சுருதிசொல்லுவதுபோலச் சுபேட்சையா திமூன்றுபூமி யப்பியாசத்தைச் சத்துவதவ மென்றும்அதை யப்பியாசித்தோருக்குப் ஞா

ன்ம்வருமுன்சரீரம்நீங்கிப்போனாற்சொர்க்கா திலோகமுண்டென்றாஞ்சருந் சொல்லுவதா லதுமேலானதவமெனக்கொள்க.

(இ-உ-கவி-ம்) அகாரண அத்துவித அகண்ட அபரிச்சின்ன அஸ்திபாதிப்பிரிய செருப மேபிரயமெனவும்வாச்சிய நீங்கிய அகமுப்பி ரமமும் அயிக்கியமாகிய அகண்டாகாரசொரு பமே அஸ்மியதார்த்தமெனவுங்கூறினதாம்.)

(அவதாரிகை)

மூன்றும்வாக்கியவுரைகூறல்; வேறு

(க-வி தத்வமசிவாக்கியந்தான்பத மூன்று மதிலே தத்பதத்தின் பொருளுரைப்பாஞ்சு மைத்தவொருகடந்தா,னித்தகைமைபெறுமு ன்னங்கொருவடிவங் கதும்பா விருப்பனவும் வேற்றுமைபா யிருப்பனவுமன்றிச்- சத்தாகி த்தமதாகிப்பெயர்தானுமின்றித் தானேதானா யிருந்ததைதன்யப்போல- வத்தகைமைபெப் பொழுதும்பெற்றிருக்குஞ்சத்தாயனிர்வசன மாய்விளங்குமதுபிரமமாமே.

(இ-ள்) தத்துவமசிவாக்கியப்- தத்வமசியெ ன் னுமூன்றும்வாக்கியமான ௩-பதமூன்றும் தத்தென்றும்- துவமென்றும்- அசியென்றும்- மூன்றுபதமுடையதாம்- அதிலே- அவற்றுள் தத்பதத்தின்- தத்தென்னுஞ் சொல்லின்- பொ ருள்- பயனை- உரைப்பாம்- அறைகின்றும் சு

மைத்த-உண்டாக்கிய-ஒருகடம்- ஓர்குடம்-இத்தலைமை-இந்தகடத்தன்மையே-பெறுமுன் அடைவதன்முன்னரிருந்த-அங்கொருவடிவு-அவ்விடத்தொப்பற்றவுருவமாகியமண்ணை து-அங்கதுபோல-அவ்விடத்தம்மண்போல. இருப்பனவும்- இருக்கின்றதும்- வேற்றுமையாய்-அதற்குமாறுபட்ட- இக்கடவடிவமாய்-இருப்பனவும்-இருக்கின்றதும், அன்றி அல்லாமல்-உண்மையாயும் தன்மயமாயும்- நாமமற்றதாயும்தான்மாத்திரமாயுமிருக்கின்றபிசைந்தமண்மொத்தைபோலவும்-சத்தாகி-மெய்யாகியும்-தமதாகி-தன்மயமாகியும்-பெயர்தானுமின்றி-நாமமில்லாததாகியும், தானேதானுயிருந்த-தான்மாத்திரமாகியுருவுள்ளசைதன்னியம்போல. துஷ்ணீம்பூதசொருபம்போலவும்-அத்தனைமை-அந்தத்தன்மயமாயுந்தான்மாத்திரமாயிருக்கின்றதன்மையை--எப்பொழுதும்-எக்காலமும்-பெற்றிருக்கும்-பொருந்தியிருக்கின்ற, சத்தாய்- -உண்மையாய்- அனிர்வசனமாய்-வாக்குமனதுக்கெட்டாததாய் -விளங்கும்-பிரகாசிக்கின்றது எதுவோ-அது- அஃதே-பிரமமாம்-தத்பதார்த்தமாகியபிரமசொருபமாம்-என-று-

(ப-ம்)விருத்திநட்டமானபின்னுமுண்டாகுமுன்னுமிருக்கப் பட்டதென்பார்- சத்தா

கியெனவும்- ஆகாயம்போல விருத்தியின்கல ப்பற்றதென்பார்- தமதாகியெனவும்- பஞ்ச விடயத்திலொருவிதமாயாவது சுட்டியறியக் கூடாதிருக்குஞ் சொரூபமென்பார் பெயர் தானுமின்றியெனவும்- ஆகாயந்தனியேயிரு க்குமாப் போலவிருத்தியின் சங்கமற்றதென் பார்தானேதானு யெனவும்- மாயையவித்தை கலப்பற்றதாயு மிரண்டாம் வஸ்துவற்றதாயு மெப்போது மிருக்கப்பட்ட தென்பார்-அத் தனைமையெப்பொழுதும் பெற்றிருக்குமெ னவும்-சிருட்டிக்குமுன்னும் பிரளயத்துக்கு ப்பின்னுமிருக்கப்பட்டதென்பார் சத்தாயெ னவும்-அதிரிசியமாயசச்சத்தாய் விளங்குவதெ ன்பார்- அனிர்வசனமாய் விளங்குமெனவுங் கூறினர்.

(இ-ம்.) சுயம்புவாய் அத்துவிதமாய்ச்சுதோதயமாய்திரிசியமாயிருக்கின்ற பிரமமே மூன்றும் வாக்கியத்தில்தத்தென்னுமுதற்பத த்துக்கருத்தமெனக் கூறியதாம். (உரு)

(அ-கை) மூன்றும்வாக்கியத்தின் மூன்று பதத்திற்குஞ்சங்கிரகார்த்தங்கூறல்.

(கவி.) இன்னமூந்தத்பதம் விளங்குமே தூவெலா மூரைப்போ மிப்பதத்தின் பொரு ளாதுதொம்மென்றியம்பல்சிவ- னன்னபதமி

ரண்டினுக்குமயிக்கிய மசியென்ப ரவைகளு பாதி யினிறபிறிந்தயிக்கமும்பெற்றதுகேள். துன்று சகதீசனுக்குச்சகலபிராணி கடன்றா லமே றாலமவர்களுக்குமமேருக்க - யின்னிம றைந்திடுமாயை காரணமாமிதனை வேறுக்கித் தானாகவிளங்கியதுபிரமம்.

(இ-ள்) இன்னமும்-மேலும்- தத்பதம்-தத்பதத்தினருத்தம்- விளங்கும்- தெரியும்படியான- எதுவெலாம்- வகையனைத்தும்- உரைப்போம்- பின்பியம்புவோம் - இப்பதத்தின் பொருள்-இந்தத்தத்தென்னும் பதத்தினருத்தம்- அது- அந்தப்பிரமமெனவும் - தொம்மென்றியம்பல்- தொம்மென்று சொல்லப்படுகின்ற பதத்தினருத்தம்-சீவன்- உயிரெனவும்-அன்னபதமிரண்டினுக்கும்- அந்ததத்துவமென்னுமிருபதங்களுக்கும்- அயிக்கியம் ஏகத்துவமே-அசியென்பார்-அசிபதத்தினருத்தமெனவும் மகான்கள்கூறுவார்கள், தத்பத துவம் பதமயிக்கமாதலெங்ஙனமெனில்- அவைகள்- அந்தத்தத்பதத்தினருத்தமாகிய பிரமமும் துவம்பதத்தினருத்தமாகிய கூடத்தரும்-உபாதியினிற்பிரிந்து-விராட்டாதி யொன்பதும்-துலாதியொன்பதும் ஆகியவாச்சியங்களினின்றுநீங்கி- அயிக்கியமும்- ஏகத்துவமும்- பெற்றது-அடைகின்றது-கேள்- யாங்கூறுது

ங்கேட்பாய்- தன்னுசகதீசனுக்கு- நிறைந்தச கத்கர்த்தனுகிய அந்தரியாமிக்கு - சகலபிரா ணிகடன்றாலமே-சீவர்களனைவரின்றாலதனு வே- தூலம்- விராட்டாகிய தூலசரீரமாம்- அ வர்குக்குமமே- அவ்வுயிர் களினிலிங்க சரீர மே-சூக்கம்-இரணியகர்ப்பமாகிய சூட்சுமச ரீரமாம்- மின்னிமறைந்திடும் - தோன்றி நீங் குகின்ற - மாயை - மாயையே - காரணமா ம் - அவ்வியாகிருத மாகியகாரண சரீரமாகு ம் இதனை- இச்சரீரத்திரயாதி வாச்சியங்களை- வேருக்கி- விலட்சணப்படுத்தி- தானக- லட் யமானதான் மாத்திரமாக - விளங்கியது - பி ரகாசிக்கின்றது- பிரமம்-பரப்பிரமசொரூப மாம்—எ—று.

(ப-ம்.) அவத்தாத்திரயங்கள் கெட்டுங்கெ டாமற்சீவித்துக்கொண்டிருக்குங் கூடத்தனெ ன்பார்- சீவனெனவும்- சராசரங்களிளெல்லா நிறைந்திருக்குஞ்சர்வக்ஞத்துவஞ்சர் வேசுர த்துவஞ்சர்வ நியந்திருத்துவஞ்சர்வாந்திரியா மித்துவம் சர்வகற்பிதத்துவம் - சர்வசத்தித் துவ மாகியசட்குண அயிசுவரிய சம்பன்ன னென்பார்-தன்னுசெகதீசனெனவும்- ஆரு தத்துவமாய் வெளியாய்காணப்பட்ட தென் பார்- தூலமெனவும்- இருபதுதத்துவமாய ஞடானத்திருலேகாணப்பட்டதென்பார்- சூ

க்குமமெனவும் - மேகத்திற்றோன்றியழியுமி ன்னல்போலத் தன்னிடத்தில் விவர்த்தமாய்த் தோன்றியழியப்பட்டமாயையென்பார் - மி ன்னிமறைந்திடுமாயையெனவும்- இவ்விரண் டுசரீரத்துக்குமேதுவென்பார் காரணமென வும்-விராட்டு இரணியகருப்பம் - அவ்வியாகி ருதம் சிருட்டிதிதிசம்மாரம் - வைசுவாநரன் சூத்ராத்மா- அந்தரியாமியாகியவிவைகளை நீ க்கியென்பார் இதனைவேறுக்கியெனவும்- ஈசு வரன் வணக்கும் மாயாசபளிதப்பிரமமாகை யால் அவைநிருபாதிகசுயம் பிரகாசப் பிரம மென்பார்-தானாக விளங்கியது பிரமமெனவு ங்கூறினர்.

(இ-ம்.) தத்துவமசியென்னு மூன்றுபதத் தின்சங்கிரகார்த்தங்கூறி அயிக்கங்கூறும்பொ ருட்டுத்தத்பதத்தின் வாச்சியார்த்த லட்சியார் த்தந்தெரியவிஸ்தாரமாய்க்கூறியதாம். (உஎ)

(அ-கை.) தொம்பதவாச்சியலட்சியார்த்த மியாதெனில்.

(கவி.) சீவவுபாதியையுரைக்கிற்றன்னள வேதூலஞ்சிலகருவி சூக்குமமாங் காரணமஞ் ஞானந்-தாவுமிதனபிமானி சீவனிவையனுகா ச்சாட்சியது தொம்மென்றேசாற்றிய கூடஸ் தர்- காவலவன் சீவனெனுமுபாதியெலா நீங் கிக்கவப்பது வேயசிபதமாய்க்காட்டுமது நீங்

கும்- பாவனையுமயிக்கியமாம்பண்பும் விதிவ
ழியேபகுத்துரைப்பர்பெரியோர்கள் பக்கு
வரானவர்க்கே.

(இ-ள்.) சீவவுபாதியையுரைக்கில்- சீவனை
துபாதியைக்கூறுமிடத்து- தன்னுளவேதூல
ம்-தன்தேகமட்டுந்தூலதேகமாகும்- சிலகரு
வி-இருபதுதத்துவங்களே- சூக்குமமாம்- இ
லிங்கசரீரமாகும்-காரணமஞ்ஞானம்- அவித்
தையேகாரணசரீரமாகும்- தாவுமிதனபிமா
னி--இச்சரீரத்திரயங்களைப்பற்றி அபிமானிக்
கின்றவன்- சீவன்- சிதாபாசனாகும்- இவைய
னுவகா-வாச்சியமான விச்சீவனையுஞ் சரீராதி
யையும் நீங்கியசாட்சி- லட்சியார்த்தமானசீவ
சாட்சியே-தொம்மென்று- நீயென்று- சாற்றி
ய-சொல்லப்படுகின்ற- கூடத்தர் பிரத்தியே
காத்மாவாகும்-அசிபதார்த்தமியாதென்னில்-
காவலவன்சிவனெனும்- ஜகத்ரட்சகனை வீசு
ருதிசிதாபாசனாதியென்கின்ற- உபாதியெலா
ம்-வாச்சியங்களனைத்தும்- நீங்கி-வேருகி- கல
ப்பதுவே- லட்சியார்த்த மானபிரம கூடத்த
ரொன்றாயிருத்தலே- அசிபதமாய்- அசிபதா
ர்த்தமாக-காட்டும்- வேதந்தெரிவிக்கும் வாக்
கியநீங்கிலட்சிய மயிக்கமாதலெனக் கனுபவ
மாகும்வகைகூறவேண்டுமெனில்- அதுநீங்கு
ம்- அவ்வாச்சியங்கள்வேருகின்ற-பாவனையும்

பாவித்தலும்- அயிக்கியமாம்- அந்தலட்சியங்
களொன்றுகின்ற- பண்பும்- விதமும்- பெரி
யோர்கள்-சத்துக்கள்- பக்குவரானவர்க்கே-ப
ருவமுற்றமாணாக்கருக்கே- விதிவழியே - மு
றைப்படியே- பகுத்துரைப்பார்-விரிவாய்க்
கூறுவார்கள்—எ—று.

(ப-ம்) சாட்சிக்காரன்போல சீவன் பஞ்ச
கோசத்திற்றுதான்மியப் படுவதைப் பற்றாத
திருந்துதெரிவிக்குமறி வென்பார் இவையனு
காச்சாட்சியெனவும்- அடைகல்லானது நிர்வி
காரமாயிருத்தல்போல சத்துவகுணகாரியமா
னவைராக்கியாதியும்- ராசதகுணகாரியமான
காமாதியும்- தாமதகுணகாரியமான சோம்ப
லாதியுந்தோன்றி யொடுங்குதற்கு ஏதுவாய்நி
ர்விகாரியாய்விளங்கப் பட்டதென்பார்கூடத்
தரெனவும்-இராசாவானவன் சட்டமீமறபடுத்
திக்குடிகள் நன்மைபண்ணும் படிக்குச்செய்
து தீமைசெய்யாது நீக்குவதும்போலவே
தத்தால்விதிநிடேதங்கற்பித்து அவ்வழியாச்சீ
வர்களை ஆட்டப்பட்டஈசுவர னென்பார்காவல
னெனவும் சித்தசுத்திசாதன முள்ளவர்க்கேய
ன்றி அவையில்லாதஅபக்குவர்களுக்குமேலோ
ர்போதியாரென்பார் பகுத்துரைப்பார் பெரி
யோர்கள் பக்குவரானவர்க்கே யெனவுங்கூறி
னர்.

